# ஸ்ரீ ராமாநுஜன் 181.







சென்னை ஸத்க்ரந்தப்ரகாசன ஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 16 | 1964௵ ஜனவரிமீ<br>சோபகிருது௵ தைமீ | ஸஞ்சிகை 1 |
|---|---|---|


## திருவாய்மொழி நூற்றந்தாதி—70.

இன்பக் கவிபாடுவித்தோனை* இந்திரையோடு
அன்புற்றுவாழ் திருவாறன் விளையில்—*துன்பமறக்
கண்டடிமை செய்யக் கருதிய மாறன்கழலே*
திண்டிறலோர் யாவர்க்கும் தேவு.

| | |
|---|---|
| இன்பக் கவி பாடுவித்தோனை | யோக்யமான திருவாய் மொழியைத் தம்மைக் கொண்டு பாடுவித்த எம்பெருமானை |
| இந்திரையோடு | —பிராட்டியோடு கூட |
| அன்புற்று வாழ் | —மகிழ்ந்து வாழுமிடமான |
| திருவாறன் விளையில் | திருவாறன் விளையென்னும் மலைநாட்டுத் திருப்பதியில் |
| துன்பம் அற கண்டு | தமது வருத்தம் தீரக் கண்டு |
| அடிமை செய்ய கருதிய | கைங்கரியம் பண்ண ஆசைப்பட்ட |
| மாறன் | —ஆழ்வாருடைய |
| கழலே | —திருவடிகளே |
| திண் திறலோர் யாவர்க்கும் | திடமான அத்யவஸாய முடையா ரெல்லார்க்கும் |
| தேவு | —தெய்வமாகும். |

* * ஆழ்வார் தாம் பாடின திருவாய்மொழியைக் கேட்கைக்காகப் பெரியபிராட்டியாருடனே பேரோலக்கமாகத் திருவாறன்விளையென்னும் மலைநாட்டுத் திருப்பதியில் எம்பெருமான் வந்தெழுந்தருளியிருக்கிற படியை அநுஸந்தித்து, நாம் அங்கே சென்று அச்சேர்த்தியிலே திருவாய்மொழியைக் கேட்பித்து அடிமை செய்யப் பெறுவது எப்போதோவென்று மநோரதிக்கிறபடியைக் கூறும்*இன்பம் பயக்கவென்கிற திருவாய்மொழி யென்றதாயிற்று.

எம்பெருமான் தம்மைக் கொண்டு திருவாய்மொழி பாடுவித்துக் கொண்ட பேருதவிக்குக் கைம்மாறு ஒன்றுங் காணாமே தடுமாறினார்—கீழ்த் திருவாய்மொழியாகிய* என்றைக்குமென்னையில். இப்படிப்பட்ட இவருடைய தடுமாற்றத்தை யாற்றுதற்காக எம்பெருமான், ஆழ்வீர்! நீர் ஏன் தடுமாறுகின்றீர்? நீரும் ஒன்று செய்து நெஞ்சாறல் தீர்ந்தவராம்படி பண்ண நாம் கருதியிருக்கின்றோம்; பண்டு திருவயோத்யையிலே நாம் குசலவர்கள்

வாயாலே ஸ்ரீராமாயணம் செவிசாத்திருேமென்று கேள்விப்பட்டிருப்பீரே; அப்படியே திருவாறன்விளைத் திருப்பதியிலே திருவாய்மொழி கேட்பதாகப் பாரித்திருக்கின்றோம்; ஆனால் ஸ்ரீராமாயணம் கேட்டபோது நாம் பிராட்டியைப் பிரிந்திருந்தோமாதலால் தனியே யிருந்து கேட்டோமென்று ஒரு குறையுண்டு. இப்போது அப்படியன்றிக்கே நாமும் நம் பெண்டுகளுமாயிருந்து கேட்க அறுதியிட்டிருக்கின்றோம்; நீர் அங்கே வந்து திருவாய்மொழி கேட்பித்து ஒருவாறு நெஞ்சாறல் தீரப் பெறலாமேயென்று பணிக்க, அது கேட்ட ஆழ்வார், என்னைக் கொண்டு திருவாய்மொழி பாடுவித்துக் கொண்ட உபகாரத்தளவோடு நில்லாமல் அது கேட்கவும் பாரியா நின்றானே! இது என்ன மஹோபகாரம்! என்று உவகை தலைமண்டை கொண்டு அந்தத் திருவாறன்விளைத் திருப்பதியிற் சென்று திருவாய்மொழி கேட்பித்தலாகிற கைங்கர்யத்தைச் செய்யப் பாரிக்கிறார் *இன்பம் பயக்கவென்னும் இத்திருவாய் மொழியினாலே. .... ... (70.)

## ஸம்வத்ஸராரம்ப விஜ்ஞாபனம்.

ஸ்ரீராமாநுஜன் பதினைந்து பிராயங்களை இடையூறொன்றுமின்றியே கடந்து இப்போது பதினாறுவது பிராயத்தில் அடியிட்டாயிற்று. எல்லாவற்றுக்கும் பகவத் க்ருபையே மூலகாரண மென்றிருந்தாலும் அந்த பகவான் தன்னுடைய க்ருபையை நேர்முகமாகக் காட்டாமல் பாகவதர்களின் மூலமாகவே காட்டு மியல்வினனாதலால் பாகவதர்களின் க்ருபையையே நாம் முக்கியமாகப் போற்றவேண்டியதாகிறது. இதற்குச் சந்தாப் பணம் செலுத்தி அநுக்ரஹிப்பதைவிட, “ஸ்நேஹேந உந்நதா யதா—ஸுபேந மநஸா த்யாதம்” என்ற கணக்கிலே ஹ்ருதய பரிபூர்ணமான ப்ரேமத்துடனே இதற்கு மங்களாசாஸனம் செய்வதுண்டே, அதுதான் மிகச் சிறந்தது. ஸ்ரீராமாநுஜனை வெகு ஆவலோடு எதிர்பார்த்திருப்பதும், கிடைத்தவுடனே பூர்த்தியாக வாசித்து முடித்தே மறுகாரியம் பார்ப்பதுமாயிருக்கிற மஹான்கள் பலருளரென்பதை அவரவர்களின் ஸ்ரீமுகங்களினாலறிந்து மகிழ்கிறோம். அன்னவர்களின் த்ருப்தியையும் அதன் பரீவாஹமான மங்களாசாஸனத்தையுமே ஸ்ரீராமாநுஜனுக்கு தாரக போஷக போக்யங்களாகக் கருதுகின்றோம்.

சென்னை டாக்டர் ஸ்ரீ. V. ராமையங்காரவர்கள் 16—1—64ல் எழுதிய கடிதத்தில் “நம் ஸம்பிரதாயத்திற்கு ஸ்ரீராமாநுஜன் செய்யும் ஸேவை ஒப்பற்றது. “வர்த்ததாம் அபிவர்த்ததாம்” என்று இதற்குப் பல்லாண்டு பாட உலகமெல்லாம் கடமைப்பட்டிருக்கின்றது. இது ஆஸ்திகர்களெல்லாருடையவும் கோரிக்கை. எனது தனிப் பிரார்த்தனையுமாகும். ஒவ்வொரு விஷயத்திலும் ஸ்ரீராமாநுஜனில் காணும் விளக்கமும் திருத்தமும் ஸ்வாமியைத் தவிர வேறு யாரால் செய்யமுடியும்? ஸ்ரீராமாநுஜனுக்கு என்னுள்ளத்தில் தனியிடமுள்ளதென்பதை விஜ்ஞாபித்து நிற்கிறேன்.” என்றுள்ள பொன்மொழிகளை இங்கு நம் ஆப்தர்களுக்கு உபஹாரமாக ஸமர்ப்பிக்கிறேன். ... .... (*)

## க்ருதஜ்ஞதாநுஸந்தானம்.

ஸ்ரீமான் உ. வே. டாக்டர். V. ராமையங்கார் (சென்னை) அவர்களும், ஸ்ரீமான் உ. வே. P. B. அனந்தாசாரியர் ஸ்வாமி (Advocate) சென்னை. அவர்களும் நமது ஸ்ரீராமாநுஜனுக்கு ஜீவிய சந்தாதாரர்களாகச் சேர்ந்து பேருதவி புரிந்ததற்கு மிக நன்றி.

ப்ரவசநம் செய்து, தேரழுந்தூராண்டவன் ஸ்ரீபாதத்திலேயே ஸம்ப்ரதாய ரஹஸ்ய க்ரந்தங்களை யதிகரித்து அவருடைய ஸ்தானத்தில் அபிஷிக்தராகி கோயிலிலேயே நித்யவாஸ நிரதரா யெழுந்தருளியிருந்து அவ்விடத்திலேயே திருநாடலங்கரித்தார்.

அந்த ஸ்வாமிக்குப் பிறகு தென்பரை யாண்டவனென்கிற ஸ்வாமி ஆஸ்தான மலங்கரித்து, பத்து வருஷங்களுக்கு மேலாக வெழுந்தருளியிருந்து சென்ற பங்குனித் திங்களில் கோயிலிலேயே திருநாடலங்கரித்தார். அந்த ஸ்வாமியும் திருமேனி பாடவக் குறைவினால் திவ்யதேச யாத்திரை செய்தருளாமலே யிருந்தார். அந்த ஸ்வாமியின் ஆஸ்தானத்தை இப்போது அலங்கரித்தருள்பவர் திருக்குடந்தை யாண்டவன். இந்த ஸ்வாமி பூர்வாச்ரமத்தில் திருக்குடந்தை கண்ணன் ஸ்வாமி என்று ப்ரஸித்தரானவர். இந்த ஸ்வாமியின் பாண்டித்யப் பெருமையையும் உபந்யாஸத் திறமையையும் அறியாதாரில்லை. பல வருஷங்களாக சென்னையில் எழுந்தருளியிருந்து அங்குப் பலவிடங்களிலும் உபந்யாஸங்கள் செய்துகொண் டெழுந்தருளியிருந்தார். டில்லி முதலான வெளிநகரங்களிலும் ஸ்வாமியை எழுந்தருளச் செய்து ஆங்காங்குள்ள பெரியார்கள் ஏராளமான உபந்யாஸங்களை நடத்திவைத்து ஆனந்தித்திருக்கிறார்கள்.

ஸ்வாமியின் வித்யார்த்தி தசையி லிருந்தே அடியேனுக்கு அதிக பரிசயம் ஏற்பட்டிருந்தது. ஸ்வாமியின் திருத்தகப்பனார் ஸ்ரீ. உ. வே. பத்மநாபையங்கார் ஸ்வாமியும் அடியேனுக்குப் பரமஆப்தராக எழுந்தருளியிருந்தார். அர்ஜுநன் ஸ்ரீக்ருஷ்ண பகவானுடைய விச்வரூபங் கண்ட பின்பு "ஸகேதி மத்வா ப்ரஸபம் யதுக்தம் ஹே க்ருஷ்ண ஹே யாதவ ஹே ஸகேதி.........யச்சாவஹாஸார்த்தமஸத்க்ருதோஸி விஹாரசய்யாஸந போஜநேஷு ॥" என்று சொன்னதிலிருந்து அவ்விருவர்க்கும் எவ்விதமான பரிமாற்ற மிருந்ததாக அறிகிறோமோ அவ்விதமான பரிமாற்ற மிருந்ததென்று சுருங்கச் சொல்லி நிற்கிறேன். அதைப்பற்றித் தனிப் புத்தக மெழுதவேண்டும்.

ஸ்வாமி எழெட்டு மாதங்களுக்கு மேலாகவே கோயிலை விட்டு யாத்திரையாகப் புறப்பட்டு [illegible] நேற்று வைகுண்ட ஏகாதசியன்று ஸ்ரீகாஞ்சி யெழுந்தருளிப் பேரருளாளனை மங்களாசாஸனஞ் செய்தருளி இவ்விடமே ஸ்ரீரங்கராஜ வீதியிலுள்ள ஆச்ரமத்தில் நித்ய க்ரந்த காலக்ஷேபாதி வைபவங்களுடன் எழுந்தருளி யிருப்பது காஞ்சீ வாஸிகளின் பரமபாக்யம். சித்திரை பிறந்தபின்பு இங்கு நின்றும் திருமலை யாத்திரையாகப் புறப்பட்டெழுந்தருளக் கூடுமென்று தெரிகிறது.

ஸ்வாமி இந்த யாத்திரையை பாதசாரத்தினாலேயே நடத்தியருள்வது குறிப்பிடத் தக்கது. அபாவே விரக்தி:, அஸாமர்த்யே விரக்தி: என்று சிலர் விஷயத்தில் சொல்லுவதுண்டு. அங்ஙனன்றிக்கே ஸகல ஸௌகர்யங்களும் குறையற்றிருந்தும் இங்ஙனே ஆசரிப்பது அநுகரிக்கத்தக்கதும் அநுகரிக்க அரியதுமாகும்.

வர்த்தமான காலத்தில் ஆங்காங்கு மடாதிபதிகளாக ஸேவை ஸாதிக்கின்ற ஸ்வாமிகள் போலவே இந்த ஸ்வாமியும் சிறந்த வித்வத் ஸார்வ பௌமராகவும் லௌகிக வைதிகங்களில் பரம சதுரராகவும் விளங்குவதும் மிக உதாரமான திருவுள்ளத்தோடு கூடியிருப்பதும் போற்றத்தக்கது. உ. வே. சித்ரகூடம் விஜயராகவாசார்யருடைய ஸஹயோகத்தினால் ஆஸ்தானம் விசேஷத: பரிமளிக்கிறது. .... ... (*)

**ஸ்ரீராமானுஜன் சந்தா செலுத்தியவர்கள் :—**

1. ஸ்ரீமான் உ. வே. ஆசால் சேஷாசாரியர் ஸ்வாமி, அட்வகேட் Madras 5
2. ,, R. V. Seshadri Iyengar Advocate Madras-8.
3. ,, M. R. Seshadri Iyengar Mannadi, Madras-1.
4. ,, G. Srinivasacarya,r Caltex, ,,
5. ,, A. Srinivasachari, Teacher, Madras-33.
6. ,, K. S. Krishnaswami Iyengar, Madras-5.
7. Sriman N. Lakshmi Narasu Naidu, ,,
8. ஸ்ரீமதி ரங்கம் ஜானகியம்மாள், ஆழ்வார்திருநகரி
9. ஸ்ரீமான் பு. கொ. மாசி செட்டியார், குன்றத்தூர் புதூர்
10. ,, தேவகோட்டை ஸௌந்தரராஜய்யங்கார், Vakil's Clerk.
11. ,, திருவேங்கடமையங்கார், Advocate, Devakottai.
12. ,, V. கேசவுலு நாயுடு, ஸ்ரீதரன் ஆத்தூர்
13. ,, A. வெங்கடஸாமி நாயுடு, மிராசுதாரர், பந்தல்குடி
14. ஸ்ரீமதுபயவே. R. ஜகன்னதய்யங்கார், பாண்டிச்சேரி
15. ,, T. N. கிருஷ்ணய்யங்கார், Asst. B. H. School, வள்ளியூர்
16. ,, K. Krishnamachariar, Chik-Ballapur (Mysore).
17. ,, R. Varadarajayyangar, Asoka Road, New Delhi.
18. ,, விரக்தி ஸ்ரீநிவாஸாசாரியர், Pandit, முஸரவாக்கம் (காஞ்சீ.)
19. ,, D. Srinivasa Iyengar, Advocate, Paramagudi.
20. ,, N. R. Raghavasami Iyengar. ,, ,,
21. ,, Narayana Iyengar, Headman, ,,
22. ,, S. Srinivasa Iyengrr, Retd., Head Clerk, Union Office, ,,
23. Sri Needa Kesavaraman, ,,
24. ஸ்ரீமான் O. K. S. குப்புஸாமி கண்ணதாஸி, மதுரை.
25. ஸ்ரீமதி. ஸரோஜினியம்மா, பெங்களூர்—4.

## ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. திருக்குடந்தை யாண்டவன்.

திருவரங்கம் பெரியகோயிலில் ஆண்டவன் ஆஸ்தானம் ஸுப்ரஸித்தமானது. அங்கு வடதிருக் காவிரிக்கரையிலுள்ள பெரிய ஆச்ரமம் ஆண்டவனுச்ரமமென்று வழங்கப்பட்டு வருகிறது. முதன் முதலாகத் தேரழுந்தூராண்டவன் என்று ப்ரஸித்தரான ஸ்வாமியை அடியேன் நன்கு அறிவேன். அந்த ஸ்வாமி காஞ்சீபுரியில் பல ஸம்வத்ஸரங்கள் எழுந்தருளி யிருந்து பகவத் விஷய பூவாஹநம் செய்துகொண்டிருந்து காஞ்சியிலேயே திருநாடலங்கரித் தார். அந்த ஸ்வாமிக்குப் பிறகு ஆக்கூராண்டவன் ஆஸ்தானத்தை அலங்கரித்திருந்தார். இந்த ஸ்வாமி பூர்வாச்ரமத்தில் ஆக்கூர் ரங்கஸாமி ஐயங்காரென்று ப்ரஸித்தராய் சோளஸிம்ஹபுரத்தில் சில ஸம்வத்ஸரங்க ளெழுந்தருளி யிருந்து ஸாஹித்யாதி பூவாஹநம் செய்துகொண்டிருந்து பிறகு காஞ்சியிலேயே ஸ்திரவாஸமாக வந்து சேர்ந்து தேவப் பெருமாள் ஸன்னிதி வீதியிலுள்ள திருவடி ஸன்னிதியில் சில ஸம்வத்ஸரங்கள் ஸ்ரீராமாயண

ஏதஸ்மிந் அதிகபய : ச்ரியம் வஹந்த்ய : ஸம்க்ஷோபம் பவநபுவா ஜவேந நீதா: ,

வால்மீகே : அரஹித ராமலக்ஷ்மணாநாம் ஸாதர்ம்யம் தததி கிராம் மஹா ஸரஸ்ய:”

என்பது. இது தன்னில் ரைவதகபர்வதத்திலுள்ள பெரிய தடாகங்களை ஸ்ரீராமாயணத்தோடு ஒப்பிட்டுப் பேசியுள்ளார் மஹாகவியானவர் தம்முடைய ஸாமர்த்திய விசேஷத்தினால். இதைச் சிறிது விவரிப்போம். एतस्मिन् — (ஏதஸ்மிந்) — இந்த ரைவதக மலையிலே, மஹா ஸரஸ்ய :– பெரிய தடாகங்களானவை, வால்மீகே : கிராம் ஸாதர்ம்யம் தததி—வால்மீகி முனிவரின் திருவாக்கான ஸ்ரீராமாயணத்தின் ஸாம்யத்தைத் தாங்குகின்றன ; ஸ்ரீராமாயண ஸத்ருசங்களா யிருக்கின்றன வென்றபடி. எங்ஙனே யென்னில் ; மூன்று அம்சங்களினால் ஸாம்யம் நிர்வஹிக்கப்படுகின்றது. 1. [அதிக பய : ச்ரியம் வஹந்த்ய :] தடாகங்களானவை அதிகமான தீர்த்தங்களின் ஸம்ருத்தியை வஹிக்கின்றன. வால்மீகி வாக்குக்களோ வென்னில் ; [அதி - கபய :, ச்ரியம் வஹந்த்ய :] என்று பிரித்துக் கொள்வது. அதிகமான வானரங்களை யுடையனவாயும், ஸ்ரீ மஹாலக்ஷ்மியான ஸீதாபிராட்டியை வஹிப்பனவாயு மிருக்கும். வானர முதலிகளின் கதையையும் பிராட்டியின் கதையையும் அதிகமாகக் கொண்டதன்றோ ஸ்ரீராமாயணம். இது ஸபங்கச்லேஷமெனப்படும். இன்னமும் ; [பவந புவா ஜவேந ஸம்க்ஷோபம் நீதா :] பவநமாவது வாயு ; காற்று. அதனாலுண்டான வேகத்தாலே தடாகங்கள் க்ஷோபத்தை யடைவிக்கப்படுவது இயல்பு. தாமரை யிலைகள் கிழிக்கப் படுவதும் தாமரை மலர்கள் சிதறவடிக்கப்படுவதும் காற்றின் கோலாஹலமாக நிகழுமன்றோ. இனி ஸ்ரீராமாயண பக்ஷத்தில் [ஜவேந பவநபுவா ஸம்க்ஷோபம் நீதா :] “ஜவோ வேகேச வேகிநி” என்கிற நிகண்டுவின்படி ஜவமென்பதற்கு வேகமும் வேகசாலியும் பொருளாகையால் வேகசாலியான ஹநுமானாலே இலங்கை ஸம்க்ஷோபமடைந்த கதையைச் சொன்னது ஸ்ரீராமாயண மென்றபடி. “ஓதமா கடலைக் கடந்தேறி உயர்கொள் மாக்கடி காவை யிறுத்துக் காதல் மக்களும் சுற்றமுங் கொன்று கடியிலங்கை மலங்க வெரித்துத் தூதுவந்த குரங்கு” என்கிற பெரிய திருமொழிப் பாசுரமும், “முன்போலா விராவணன் தன் முது மதிளிலங்கை வேவித்து அன்பினா லனுமன் வந்து” என்கிற திருக்குறுந்தாண்டகப் பாசுரமும் இங்கு நினைக்கத்தக்கன. பவநபுவா என்றது — பவநாத்மஜேந (மாருதிநா) என்றபடி. இன்னமும் ; [அரஹித ராம லக்ஷ்மணாநாம்] ஸ்ரீராமாயணத்தில் ராம லக்ஷ்மணர்கள் இணை பிரியாதிருப்பர்கள். தடாகங்களிலோ வென்னில் ; ஸாரஸ பக்ஷிகளின் தம்பதிகள் இணை பிரியாதிருக்கும். ராம : என்று ஆண் ஸாரஸ பக்ஷிக்கும், லக்ஷ்மணா என்று பெண் ஸாரஸ பக்ஷிக்கும் நிகண்டு ஸித்தமான பெயர்.

இங்ஙனம் தடாகத்திற்கும் ஸ்ரீராமாயணத்திற்கும் ஸாம்யம் கூறப்பட்டிருப்பதானது ச்லேஷாலங்கார ஸம்பத்தினாலாயது. இது கவிதானே விரும்பிச் செய்ததாகும். ஆண்டாள் தன்னுடைய பாசுரங்களில் இங்ஙனே சிலேடையை அமைத்திருக்கவில்லை. உள்ள சொல் தொடைகளை நோக்கி வக்தாக்கள் ஸமந்வயப்படுத்திக் காட்டலாமத்தனை. ஸதஸ்ஸில் உபஸ்திதர்களான பண்டிதர்களுக்குப் பர்யாப்தமான அவகாசமளிக்கப் பட்டிருந்தால் அவரவர்கள் தம் தம் விவக்ஷிதங்களை விவரித்துரைக்க ஸௌகர்ய மிருந்திருக்கும்.

ஸதஸ்ஸின் நிர்வாஹகர்கள் அடியேனுக்கு *வங்கக் கடல் கடைந்த பாசுரத்தைக் கொடுத்து, இதில் செல்வத் திருமாலால் இன்புறுவர் என்றதைக் கொண்டு ஸ்ரீராம பட்டாபிஷேகத்தை நடத்தித் தலைக்கட்டுமாறு நியமித்திருந்தபடியாலும், மேல் வக்தாக்களில்லாமையாலே அவகாச நிர்ப்பந்த மில்லாமலிருந்த படியாலும் அந்தப் பாசுரத்திலிருந்து ஸ்ரீராமா

ஸ்ரீ:
ஆண்டாள் திருவடிகளே சரணம்.
எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

# திருப்பாவை — வித்வத் ஸதஸ்ஸு.

## — திருப்பாவை ராமாயணம் —

சிலவாண்டுகளாக மார்கழி மாதந்தோறும் சென்னை மாநகரில் பல பேட்டைகளி லும் திருப்பாவை காலக்ஷேபரூபமாகவும் உபந்யாஸ ரூபமாகவும் பல பண்டிதர்களால் நடத்தப்பட்டு வருவது ப்ரஸித்தமே. ஒரு ஞாயிற்றுக்கிழமையில் அப்பண்டிதர்களை யெல்லாம் ஒன்று சேர்த்துச் சில கனவான்களால் திருப்பாவை வித்வத் ஸதஸ்ஸென்னும் பெயரால் ஒரு பெரிய ஹாலில் ஸபையொன்று கூட்டப்பட்டு அப்பண்டிதர்களெல்லாரும் அங்கு வரவழைக்கப்படுகிறார்கள். ஒவ்வொருவர்க்கும் சில நிமிஷங்கள் மட்டும் அவகாச மளித்து ஒவ்வொரு பாசுரத்தின் துணுக்கையை யெடுத்துக்கொண்டு ஸ்வல்பம் பேசும்படி செய்வது இந்த ஸதஸ்ஸின் வழக்கம். இவ்வாண்டிலும் இந்த பண்டித ஸதஸ்ஸு 12—1—1964 ஞாயிற்றுக்கிழமையன்று தியாகராயநகரில் சாரதா வித்யாலய ஹாலில் கூடிற்று. பொறுப்பாளிகளின் ஆஹ்வானத்தின்மேல் முப்பது பண்டிதர்கள் ஸதஸ்ஸை அலங்கரித்தார்கள். இருவர் அல்லது மூவர் தாங்கள் நேரில் வரமுடியாமல் பிரதிநிதிகளை யனுப்பியதாகத் தெரியவந்தது. ஸதஸ்ஸின் ஸ்தலம் மிகவும் விசாலமானபடியால் பரிகணை நீயமான திரள் கூடியிருந்து அநுபவித்தது.

ஸதஸ்ஸின் பிரகடன பத்திரிகையில் "திருப்பாவை ராமாயணம்" என்று மகுடம் சாற்றப்பட்டிருந்தது. திருப்பாவையின் பாசுரத் துணுக்கையை யெடுத்துக்கொண்டு உபந்யஸிக்கும் பண்டிதர்க ளனைவரும் அந்தத் துணுக்கையில் ஸ்ரீராமாயண கதையையே அநுபவிக்க வேணுமென்று நிபந்தனை செய்யப்பட்டிருந்தபடியால் அதற்குச் சேர அங்ஙனே மகுடம் இடப்பட்டதாம்.

திருவாயர்பாடிப் பிரானை ஸ்ரீ க்ருஷ்ண பகவானையே இலக்காகக் கொண்டு அவதரித்த திருப்பாவையில், 4. தாழாதே சார்ங்க முதைத்த சரமழைபோல். 10. கும்ப கரணனும் தோற்று முனக்கே பெருந்துயில்தான் தந்தானோ? 12. சினத்தினால் தென்னிலங் கைக் கோமானைச் செற்ற. 13. பொல்லா வரக்கனைக் கிள்ளிக் களைந்தானை. 24. சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய். என்றிக்தகைய சில பாசுரத் துணுக்கைகளைக் கொண்டு ராமாவதாரத்தை யனுபவிக்க முடியுமெனினும் ஸ்ரீராம கதா ப்ரஸ்தாவ கந்தமே யில்லாத மற்றைப் பாசுரங்களிலிருந்து அவ்வநுபவம் எங்ஙனே செய்ய முடியும்? என்று சிலர் நினைக்கக்கூடும். இது அஸம்பாவிதமன்று; பல வழிகளால் ஸம்பாவிதமேயாகும். மாககவி இயற்றிய சிசுபால வத மஹா காவியத்தில் நான்காவது ஸர்க்கத்தில் ரைவதக பர்வத வர்ணனம் அற்புதமாகச் செய்யப்பட்டுள்ளது. அதில் 59-ஆம் சுலோகம்:—

" एतस्मिन्नधिकपयःश्रियं वहन्त्यः संक्षोभं पवनभुवा जवेन नीताः ।
वाल्मीकेररहितरामलक्ष्मणानां साधर्म्यं दधति गिरां महासरस्यः ॥

யண கதா பாகங்களைப் பெரும்பாலும் அநுபவிக்க வாய்ப்பு இருந்தது. அங்கு அநுபவித்த படியைப் பலருமறிய இங்கு ஸாரமாக விஜ்ஞாபிக்கிறேன் சில ஸஹ்ருதய ஸுஹ்ருந் மணிகளின் நியமனத்தை யநுஸரித்து. முந்தின இருபத்தொன்பதாம் பாசுரத்திற்கு உபந்யாஸகராக நியமிக்கப்பட்டிருந்த பண்டிதர் உபஸ்தித ராகாமையினாலே அவர் பணியையும் அடியேன் செய்ய நேர்ந்தது. அவர் அந்தப் பாசுரத்திலிருந்து தாம் உபந்யஸிக்க விரும்பியிருந்த துணுக்கையை உற்றோம் என்று குறிப்பிட்டிருந்தார். *சிற்றஞ் சிறுகாலைப் பாசுரத்தில் "உன்றன்னோடு உற்றோமே யாவோம்" என்ற பகுதி அப்பண்டிதர்க்கு விவக்ஷிதமாயிருந்தபடியால் அதிலுள்ள உற்றோமென்பதைச் சிறிது விவரிக்க ஆரப்தமாயிற்று.

உற்றோமாவோ மென்பதற்கு அவிநாபூதரா யிருப்போமென்பது தாத்பர்யம். ஸ்ரீராமாயணத்தில் [உத்தர ஸ்ரீராமாயண முட்பட] பெருமாளும் பிராட்டியும் பலகாலம் பிரிந்திருந்ததாகக் கதை தெரியவந்தாலும், பிராட்டியின் திருவாக்காலும் பெருமாளுடைய திருவாக்காலும் பிரிவென்பது அடியோடு இசையப்படவில்லை. "**अनन्या राघवेणाहं भास्करेण प्रभा यथा** — அநந்யா ராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபா யதா" என்பது பிராட்டியின் திருவாக்கு. பாஸ்கரனான ஸூர்யன் ஆகாசத்தில் பலயோஜனை தூரத்தளவில் இருந்தாலும் அவனுடைய பிரபையானது நம்மில்லத்தளவும் புகுந்து பரந்திருக்கக் காணுகின்றோம். இதனால் ஸூர்யனுக்கும் பிரபைக்கும் விச்லேஷமுண்டாய் விட்டதாக யாரும் நினைப்பதில்லை. இந்த த்ருஷ்டாந்தத்தைப் பிராட்டி கூறியதனால் திவ்ய தம்பதிகளின் அவிநாபாவம் ஸ்பஷ்ட ஸித்தமாயிற்று. இங்ஙனே பிராட்டி கூறினது பெருமாளுக்குத் தெரியாமலிருக்கச் செய்தேயும், அவருடைய திருவாக்கினாலும் இவ்வர்த்தமே வெளிவந்தது "**अनन्या हि मया सीता भास्करेण प्रभा यथा** — அநந்யா ஹி மயா ஸீதா பாஸ்கரேண ப்ரபா யதா." என்றார். பிராட்டியின் வாக்கினால் தனக்கும் பெருமாளுக்கும் அவிநாபாவம் ஸாதிக்கப்பட்டது; பெருமாள் வாக்கினால் தனக்கும் பிராட்டிக்கும் அவிநாபாவம் ஸாதிக்கப்பட்டது என்னுமிவ்வளவே வாசி. த்ருஷ்டாந்த ப்ரதர்ஶநத்தில் எள்ளளவும் வாசியில்லை. "பாஸ்கரேண ப்ரபா யதா" என்கிற த்ருஷ்டாந்தம் இருவர் திருவாக்கிலும் அவிசேஷமாக வந்துள்ளது. இதைக் கொண்டே "**जयत्याश्रितसंत्रासध्वान्तविध्वंसनोदयः । प्रभावान् सीतया देव्या परमव्योम भास्करः** — ஜயத் யாச்ரித ஸம் த்ராஸ த்வாந்த வித்வம்ஸ நோதய:, ப்ரபாவாந் ஸீதயா தேவ்யா பரம வ்யோம பாஸ்கர:" என்று ரகுவீர கத்ய மங்கள ச்லோகம் அவதரித்ததாயிற்று. *உன்றன்னோ டுற்றோமே யாவோமென்று ஆய்ச்சிகள் பாரித்ததும் பெற்றதும் இத்தகைய அவிநாபாவமேயாம்.

## *இனி, வங்கக்கடல் கடைந்த ராமாயணர்.*

நாச்சியார் திருமொழியில் கடல் கடைந்த விருத்தாந்தத்தைப் பேசுகின்ற ஆண்டாள் ஸமுத்ர மதனமாகிற அவ்வரிய பெரிய செயலை எம்பெருமான் செய்தது தேவர்களுக்கு அமுதமளிக்க வென்னும் வியாஜத்தினால் பெரியபிராட்டியாரைத் தான் பெறுவதற்காகவே யென்று காட்டுகிறாள் "மந்தரம் நாட்டியன்று மதுரக் கொழுஞ்சாறு கொண்ட சுந்தரத் தோளுடையான்" என்னும் பாசுரத்தினால். தேவர்களுக்குக் கொடுத்த உப்புச் சாற்றை வ்யாவர்த்திப்பிக்கைக்காக 'மதுரக் கொழுஞ்சாறு' என்றாள். பிராட்டியேதான் மதுரக் கொழுஞ்சாறாகக் கருதப்பட்டாள். அது அடுத்துள்ள கொண்ட என்னும் பெயரெச்சத்தினாலும் விளக்கப்பட்டது.

கொடுத்தது உப்புச் சாறு; கொண்டது அமுதக் கொழுஞ்சாறு. இதுதன்னைக் கூரத்தாழ்வான் ஸுந்தர பாஹு ஸ்தவத்தில் "उदधिग मन्दराद्रिमथिमन्थनलब्धपयोमधुररसे-न्दिराहृतसुध सुन्दरदोःपरिघम्—உததிக மந்தராத்ரி மதிமந்தந லப்த பயோமதுர ரஸேந்திராஹ்ருதஸுத ஸுந்தரதோ: பரிகம்" என்பதனால் நன்கு வியாக்கியானித்தருளினார். "விண்ணவ ரமுதுண அமுதில் வரும் பெண்ணமு துண்ட எம்பெருமானே!" என்றார் திருமங்கை யாழ்வாரும். ஆக, கடல் கடைகையாகிற அரும் பெருந் தொழில் செய்து பெரியபிராட்டி யாரைப் பெற்றதுபோல, வேறொருவர்க்கும் எடுக்கவு மொண்ணாத வில்லை அவலீலையாக வெடுத்து வளைத்து அருந்தொழில் செய்தது ஸீதாபிராட்டியைப் பெறுதற்காதலால், வங்கக் கடல் கடைந்து — அருமையான காரியத்தைச் செய்து, மாதவன் — ஸீதாபதியாயின னென்றதாகக் கொள்க. मया धवः–माधवः ; मैथिलीप्राणनाथ इत्यर्थः। ஆகவித்தால் ஸீதா விவாஹ வட்டம் சொல்லிற்றாயிற்று. ரூபகாதிசயோக்தி யலங்காரமிது.

மேலே கேசவனென்றதனால் பரசுராம பங்க கதை ஸூசிதமாகிறது. எங்ஙனே யென்னில்; கேசவ நாமமானது பரமசிவனால் பகவானுக்கு அர்த்த விவரண பூர்வகமாக அளிக்கப்பட்டது. பிரமனுக்கும் சிவனுக்கும் மேம்பட்டவனென்பது விவரண ஸித்தமான பொருள். பரசுராம பங்கத்தினால் பெருமாளுக்கு ஸித்தித்தது அப்ரமேயமான பரத்வமே யாதலால் அது கேசவனை யென்பதனால் ஸூசிதமென்னக் குறையில்லை.

மேலே "திங்கள் திருமுகத்துச் சேயிழையார் சென்றிறைஞ்சி" என்பதனால் மேலுள்ள பல காண்டங்களின் கதை ஸூசனையாக வன்றிக்கே வ்யக்தமாகவே தெரிவிக்கப் படுகிறது. எங்ஙனே யென்னில்; சேயிழையார் என்று ஸ்த்ரீகளுக்குப் பெயர். செவ்விய இழைகளை — ஆபரணங்களை யணிந்துள்ளவர்களென்று காரணப் பெயர். புமான்கள் ஆபரணங்களை யணிந்திருந்தாலும் அவர்களைச் சேயிழையார் என்பதில்லை. ஆக ஸ்த்ரீ களின் மங்களாசாஸனமும் புகழுரையும் சேயிழையா ரிறைஞ்சி யென்பதனால் சொல்லப்பட்ட தாகிறது. ஸ்ரீராமாயணத்தில் இராமபிரானுக்குக் கிடைத்த மங்களாசாஸனங்களும் புகழுரைகளு மெல்லாம் பெரும்பாலும் ஸ்த்ரீகள் மூலமாகவே யென்பதை மூதலிப்போம்.

(1) பெருமாளுக்கு யுவராஜ பட்டாபிஷேகம் செய்வதாகக் கோலினவளவிலே "स्त्रियो वृद्धास्तरुण्यश्च सायंप्रातस्समाहिताः। सर्वान् देवान्नमस्यन्ति रामस्यार्थे यशस्विनः— ஸ்த்ரியோ வ்ருத்தாஸ் தருண்யச் ச ஸாயம் ப்ராதஸ் ஸமாஹிதா:, ஸர்வாந்தேவாந் நமஸ்யந்தி ராமஸ்யார்த்தே யசஸ்விந:." [அயோ. 2–53] என்று கிழவிகளும் யுவதிகளு மான ஸ்த்ரீகளே மங்களாசாஸனம் செய்ததாகச் சொல்லிற்று. (2) "पतिसम्मानिता सीता भर्तारमसितेक्षणा। आद्वारमनुवव्राज मङ्गलान्यभिदध्युषी—பதிஸம்மாநிதா ஸீதா பர்த்தார மஸிதேக்ஷணா, ஆத்வார மநு வவ்ராஜ மங்களாநி அபிதத்யுஷீ" (அயோ. 16–21.) என்று அடுத்தபடியாக ஸீதாபிராட்டி மங்களாசாஸனம் செய்தபடி சொல்லிற்று. (3.) "यन्मङ्गलं सुपर्णस्य विनताऽकल्पयत्पुरा। अमृतं प्रार्थयानस्य तत्ते भवतु मङ्गलम्—யந்மங்களம் ஸுபர்ணஸ்ய விநதா அகல்பயத் புரா, அம்ருதம் ப்ரார்த்தயாநஸ்ய தத்தே பவது மங்களம்." என்று அடுத்தபடியாகக் கௌஸல்யாதேவி மங்களாசாஸனம் செய்தபடி சொல்லிற்று. (4) இதற்கடுத்தபடியாக ஆரண்ய காண்ட உபக்ரமத்தில் மஹர்ஷிகள் மங்களாசாஸனம் செய்தபடி சொல்லுகிறது. இவர்கள் ஆண்களே யொழியச் சேயிழையாரல்லரே யென்று நினைக்கக்கூடும். இங்கு ஒரு மருமம் உணர்த்த விரும்புகிறேன். "ते तं सोममिवोद्यन्त

दृष्ट्वा वै धर्मचारिणः। मङ्गलानि प्रयुञ्जानाः— தே தம் ஸோம மிவோத் யந்தம் த்ருஷ்ட்வா வை தர்ம சாரிண:, மங்களாநி ப்ரயுஞ்ஜாநா:" என்னப்பட்ட தண்டகாரண்ய வாஸிகளான மஹர்ஷிகள் அடுத்த ச்லோகத்தில் "रूपसंहननं लक्ष्मीं सौकुमार्यं सुवेषताम्। ददृशुर्विस्मिताकाराः—ரூபஸம்ஹநநம் லக்ஷ்மீம் ஸௌகுமார்யம் ஸுவேஷதாம், தத்ருசுர் விஸ்மிதாகாரா:', என்னப்பட்டார்கள் வால்மீகி மஹர்ஷியினால். இங்கு விஸ்மிதாகாரா: என்ற ஸ்தானத்தில் விஸ்ம்ருதாகாரா: என்ற பாடமும் பல ஸ்ரீகோசங்களிற் காண்கிறது. அந்த மஹர்ஷிகள் தங்களுடைய ஆண்மையை மறந்து பெண்மையை ஏறிட்டுக் கொண்டதாகப் பொருள்படநின்றது. "ஆடவர் பெண்மையை அவாவுந் தோளினாய்!" என்ற கம்பர் வாக்குக்கு இது மிகப் பொருந்தும். பாண்டவர்களின் அஜ்ஞாத வாஸகாலத்தில் விராட நகரத்தில் த்ரௌபதியைக் கண்ட பெண்மணிகளெல்லாம் "பும்பாவம் மநஸா யயு:" என்னும்படி ஆண்மையை ஆவாஹனம் செய்துகொண்டதுபோல, இராமபிரானுடைய வடிவழகில் ஈடுபட்ட ஆரண்ய மஹர்ஷிகள் மநஸா பெண்மையை யெய்தினதாகவும், அவர்களே க்ருஷ்ணாவதாரத்தில் கோபிகளாக வந்து பிறந்ததாகவும் புராணங் கூறுதலுமுண்டு. ஆகவே இந்த மஹர்ஷிகளையும் சேயிழையார் கோஷ்டியிலேயே பரிகணநம் செய்துகொள்ளக் குறையில்லை. (5.) அடுத்தபடி சூர்ப்பணகையின் புகழுரை நிகழ்கிறது; * "तरुणौ रूपसंपन्नौ सुकुमारौ महाबलौ। पुण्डरीकविशालाक्षौ चीरकृष्णाजिनाम्बरौ—தருணௌ ரூபஸம்பந்நௌ ஸுகுமாரௌ மஹாபலௌ, புண்டரீக விசாலாக்ஷௌ சீரக்ருஷ்ணாஜிநாம்பரௌ." இத்யாதி ஸுப்ரஸித்தம். (6) அதன் பிறகு தாரையின் புகழுரை பரோக்ஷத்திலும் ப்ரத்யக்ஷத்திலும் அப்ரமேயமானது. "निवासवृक्षस्साधूनाम् आपन्नानां परा गतिः।..........धातूनामिव शैलेन्द्रो गुणानामाकरो महान्—நிவாஸவ்ருக்ஷஸ் ஸாதூநாம் ஆபந்நாநாம் பராகதி:............தாதூநாமிவ சைலேந்த்ரோ குணாநாமாகரோ மஹாந்." இத்யாதிகள் (தாரை) பரோக்ஷத்தில் செய்த ப்ரசம்ஸை. "त्वमप्रमेयश्च दुरासदश्च जितेन्द्रियश्चोत्तमधार्मिकश्च। अक्षय्यकीर्तिश्च विचक्षणश्च क्षितिक्षमावान् क्षतजोपमाक्षः—த்வமப்ரமேயச் ச துராஸதச் ச ஜிதேந்த்ரியச் சோத்தமதார்மிகச் ச, அக்ஷய்ய கீர்த்திச் ச விசக்ஷணச் ச க்ஷிதிக்ஷமாவாந் க்ஷதஜோபமாக்ஷ:." இத்யாதிகள் ப்ரத்யக்ஷத்தில் செய்த ப்ரசம்ஸை. (7) முடிவாக மந்தோதரியின் ப்ரசம்ஸை நிகழ்கிறது; "व्यक्तमेष महायोगी ....... तमसः परमो धाता शंखचक्रगदाधरः। श्रीवत्सवक्षा नित्यश्रीः अजय्यः शाश्वतो ध्रुवः—வ்யக்தமேஷ மஹாயோகீ...........தமஸ: பரமோ தாதா சங்கசக்ரகதாதர:, ஸ்ரீவத்ஸவக்ஷா நித்யஸ்ரீ: அஜய்யச் சாச்வதோ த்ருவ:" இத்யாதியாக அவள் ஓலக்கத்தில் ஓலமிட்டவை ஒருமஹர்ஷியின் வாக்கிலும் வந்ததல்ல. இவ்விடத்திற்கு ரகுவீரகத்யம் "रजनिचरयुवतिविलपनवचनसमविषय निगममकुटनिकरमुखरमुख मुनिवर परिपणित" என்றன்றோ அவதரித்துள்ளது. ஆக இவ்வளவும் சேயிழையார் சென்றிறைஞ்சினபடியை முதலித்தோமாகேனும், இச்சேயிழையார்க்குத் திங்கள் திருமுகத்து என்று விசேஷணமிட்டது முகத்தின் அழகைப்பற்றியன்று. பின்னையோவென்னில், *नवोनवो भवति जायमानः.......चन्द्रमाः* என்கிற வேதவாக்கியம் சந்திரன் புதிது புதிதாகத் தோன்றுவதாய் ஓதியுள்ளபடி ஒருத்தி சொன்னவார்த்தை மற்றொருத்தி சொல்லாதே ஒவ்வொருத்தியும் அபூர்வமான விஷயங்களையிட்டே சொன்னபடியால் நவம் நவமான வாய்மொழியை யுடையவர்களென்றவாறு. திருமுகம் என்பதனால் வார்த்தை விவக்ஷிதம்.

இறைஞ்சி என்ற வினையெச்சத்தை 'சொல்திரியினும் பொருள் திரியா வினைக்குறை" என்ற நன்னூற் சூத்திரத்தின்படி 'இறைஞ்ச' என்று செயவெனெச்சமாகக் கொள்ள

வேணும். ஏனெனில், திருப்பாவையில் இறைஞ்சினவர்களும் பறைகொண்டவர்களும் வேறுபட்டவர்களல்லர்; ஸ்ரீராமாயணத்தில் இறைஞ்சினவர்கள் மேலே விவரித்த மாதர்கள்; பறைகொண்டவர் சக்ரவர்த்திதிருமகனார். ஆகவே வாசா நகூதுஷகுதுமில்லாமையாலே இலக்கண நெறிக்கும் வழுவாத இம்முறை கொள்ளக்கடவதாயிற்று.

பறைகொண்டவர் பெருமாள். பறைகொள்ளுகையாவது ஸமீஹிதஸித்தி பெறுதல். பெருமாளுடைய ஸமீஹிதம் ஏதுவென்னில் ராவண ஸம்ஹாரமும் ஸீதாபரிக்ரஹமும் என்று சிலர் நினைப்பர். இது நம் ஆசார்யர்களின் கோஷ்டியில் விலைச்செல்லுமதன்று. "விபீஷணோ வா ஸுக்ரீவ! யதி வா ராவணஸ் ஸ்வயம்" என்றருளிச் செய்தவரும் 'இன்று போய் நாளை வா' என்று அனுமதித்து விட்டவருமான பெருமாள் ராவணவதத்தை ஸமீஹிதமாகக் கொள்பவரல்லர். "த்வயி கிஞ்சித் ஸமாபந்நே கிம் கார்யம் ஸீதயா மம" என்று சரக்கறவருளிச் செய்த பெருமாள் ஸீதாலாபத்தையும் ஸமீஹிதமாகக் கொள்பவரல்லர். பஞ்சவடியிற் போந்த சூர்ப்பணகை "விபீஷணஸ் து தர்மாத்மா ந து ராக்ஷஸ சேஷ்டித:" என்று சொல்லக் கேட்டது முதலாகப் பெருமாளுடைய திருவுள்ளத்தில், அவனிருக்குமிடமேற வெழுந்தருளி அவனை யநுக்ரஹிக்கவேணுமென்கிற குதூஹலமே மிக்கிருந்தது. அப்படியே அவனை யநுக்ரஹிக்கப் பெற்றதுதான் அங்குப் பறைகொண்டவாறு. இவ்விஷயம் வால்மீகிமுனிவர் திருவாக்கில் பல விடங்களில் காணக்கிடந்தாலும் கம்பர் இதை வெகு சமத்காரமாக வெளியிட்டுள்ளார். கம்பராமாயணத்தில் இது மிகச் சிறந்த விடம்; (அதாவது) ஸ்ரீ விபீஷணாழ்வானைப் பரிக்ரஹித்தருளினவனந்தரம் அவனை நோக்கிக் கூறுகின்றார் பெருமாள்—

"குகனொடு மைவரானேம் முன்பு, பின் குன்று சூழ்வான்
மகனொடு மறுவரானேம், எம்முழை யன்பின்வந்த
அகனமர்காதலை! நின்னொடு மெழுவரானேம்
புகலருங் கானம்போக்கிப் புதல்வராற் பொலிந்தானுந்தை." என்று.

நெடுநாள்வரையில் மகப்பேறில்லாது வருந்திக்கிடந்த சக்ரவர்த்திக்கு தைவயோகத்தாலே புதல்வர் நால்வர் ஏககாலத்திலே பிறக்கலாயினர். அதனால் த்ருப்தி பெறாதே இன்னமும் பிள்ளைகள் வேணுமென்று தோன்றி என்னை நோக்கி 'ராமா! நீ கானகஞ்சென்று இன்னமுஞ் சில ஸஹோதரர்களை ஸம்பாதித்து வா' என்று கட்டளையிட்டு அனுப்பினர்; புறப்பட்டவேளை நன்றாயிருந்ததனால் கங்கா கூலத்திலும் பம்பாதீரத்திலும் ஸாகரதடத்திலும் ஸஹோதரர்களைப் பெற்றேன்; கங்கா கூலத்தில் கிடைத்த ஸஹோதரன் குஹன்; பம்பாதீரத்தில் கிடைத்த ஸஹோதரன் ஸுக்ரீவன்; இக்கட்டற்கரையில் கிடைத்த ஸஹோதரன் (விபீஷணா!) நீ காண்!. ஆக, சக்ரவர்த்தி என்னைக் காட்டுக்குப் போகவிட்டுப் புத்ரஸம்பத் ஸம்ருத்தி பெற்றான்—என்பது மேலே குறித்த கம்பர் செய்யுளின் கருத்து. பெருமாள் திருவுள்ளத்தால் இதுவே ஸமீஹிதஸித்தி யாதலால் இதனையே பறைகொண்டவாறாகக் கொள்வது பொருந்தும். "மன்னுடைய விபீடணற்காய் மதிளிலங்கைத் திசை நோக்கி மலர்கண் வைத்த என்னுடைய திருவரங்கர்" என்ற பெரியாழ்வார் திருமொழியும் இது தனக்குச் சாலவிணங்கும்.

இனி "அணிபுதுவை......சோதை சொன்ன" என்றுள்ள ப்ரபந்த விசேஷணமும் ஸ்ரீராமாயணத்திற்கு நன்கு இணங்கும்படியை உபபாதிப்போம். ஆண்டாளுக்கும் வான்மீகி முனிவர்க்கும் அபலபிக்கவொண்ணாத வொரு ஸந்நிகர்ஷம் கோதாஸ்துதியில் வைதிக

ஸாரணியில் விளக்கப்படுகிறது. அதில் "वल्मीकतः श्रवणतो वसुधात्मनस्ते जातो बभूव स मुनिः कविसार्वभौमः । गोदे ! किमद्भुतमिदं यदमी स्वदन्ते वक्त्रारविन्दमकरन्दनिभाः प्रबन्धाः—வல்மீகதச் ச்ரவணதோ வஸுதாத்மநஸ் தே ஜாதோ பபூவ ஸ முநி: கவிஸார்வபௌம:, கோதே! கிமத்புதமிதம் யதமீ ஸ்வதந்தே வக்த்ராரவிந்தமகரந்தநிபா: ப்ரபந்தா:" என்கிற ச்லோகத்திற்கு அடியேனுடைய வியாக்கியானத்தின் ஒரு பகுதி இங்கு எடுத்துக்காட்டப்படுகின்றது;

'தைத்திரீய யஜுர்ப்ராஹ்மணத்தில் *ओंव्हेतत्पृथिव्याः। यद्वल्मीकः* என்று ஓதப்பட்டுள்ளது. இதன் பொருளாவது-நிலத்தில் தென்படும் புற்றானது பூமிதேவியின் காது என்றபடி. ஆண்டாள் பூமிப்பிராட்டியின் அம்சமாதலால் பூமி என்றே கொள்ளத் தகுதி யுடையவள். ஆகவே, புற்று இவளுடைய காதாக ஆயிற்று. புற்றில் நின்றும் தோன்றிய வால்மீகி முனிவர் ஆண்டாளுடைய காதில் நின்றும் தோன்றினவரென்று சொல்வதற்கு உபபத்தி ஏற்பட்டுவிட்டது. இங்ஙனம் உமது காதில் நின்றும் தோன்றிய ஒருவர் கவியரசர் என்று உலகமெங்கும் புகழ் பெற்றிருப்பதும், அவருடைய பிரபந்தமாகிய ஸ்ரீராமாயணம் மதுரமென்று புகழ் பெற்றிருப்பதும் அபலபிக்கவொண்ணாத விஷயங்களாகும். உலகத்தில் ஒருவருடைய காதில் நின்று உண்டான வஸ்துவுக்கு இவ்வளவு அதிசயம் ஏற்படுவது அப்ரஸித்தம். உம்முடைய காதின் பெருமையோ லோகவிலக்ஷணமாயுள்ளது. காதினுடைய பெருமையே இதுவானால் திருவாக்கின் பெருமையைப் பற்றிப் பேசத்தானுவதுண்டோ? உமது திருவாயோ அரவிந்தம்; அரவிந்தத்தில் மகரந்தம் ஸ்ரவிப்பது ஸஹஜமேயாதலால் மகரந்தம் போன்ற திவ்ய ப்ரபந்தங்கள் உமது திருவாக்கில் நின்றும் தோன்றின வென்பதில் வியப்பு ஒன்றுமில்லைகிடீர். ஸ்ரீராமாயணத்திற்கு ஏற்பட்டிருக்கும் போக்யதையைப் பற்றிச் சிறிது வியக்கவேண்டுமேயல்லது உம்முடைய திவ்யப்ரபந்தங்களுக்கு ஏற்பட்டிருக்கின்ற போக்யதையைப் பற்றிச் சிறிதும் வியக்கவேண்டிய ஸக்தியில்லை என்பது உள்ளுறை இதனால், வால்மீகி கோகிலத்தின் சொற்களிலும் கிளிமொழிக்கோதையின் சொற்களே பரமமதுரங்களென்பது பெறுவிக்கப்பட்டது.'

இவை அடியேனுடைய கோதாஸ்துதி வியாக்கியான வாக்கியங்கள். இதனால் ஸ்ரீராமாயணத்திற்கும் தத்வக்தாவான வால்மீகிக்கும் ஒரு குறைவும், திருப்பாவைக்கும் தத்வக்த்ரியான ஆண்டாளுக்கும் ஒரு நிறைவும் கூறப்பட்டிருந்தாலும் ஸாம்யநிர்வாஹத்தில் தான் திருவுள்ளமென்பதை ஆலங்காரிகர்கள் நிர்ணயிக்கக் கடவர்கள். ஆக, பட்டர்பிரான் கோதையின் திருவாக்கிலிருந்து அவதரித்த திருப்பாவையும், கோதை திருச்செவியினின்று தோன்றினவரிடமிருந்து தோன்றிய ஸ்ரீராமாயணமும் ஸமானமேயென்னத் தட்டில்லை.

[சங்கத் தமிழ்மாலை] தமிழ் என்னுஞ் சொல்லுக்கு த்ராவிடபாஷையென்பது மட்டும் பொருளன்று. இனிமை என்பதும் நிகண்டு ஸித்தமான பொருள். கம்பராமாயணப் பிரயோகமுமொன்று காட்டுகிறேன். அதில் ஆரணிய காண்டத்தில் பெருமாள் பெரியவுடையார்க்கு சரமகைங்கரியம் நிகழ்த்திப் பொறுக்கொணாத துன்பக்கடலில் ஆழ்ந்திருக்கையில் வானத்தில் சந்திரோதயமானதைக் கூறுகின்ற கம்பர் "வண்டுளர் கோதைச் சீதை" யென்னுஞ் செய்யுளில் "தண்டமிழ்த் தென்றலென்னுங் கோளராத் தவழுஞ்சாரல்" என்றார். இனிமைமிக்க தென்றல் காற்று என விவக்ஷித்துத் தமிழ்த் தென்றல் என்றார். "पाठ्ये गेये च मधुरम्—பாட்யே கேயே ச மதுரம்" என்று ப்ரஸித்திபெற்ற ஸ்ரீராமாயணத்தின் மாதுர்யம் சொல்லவும்

வேணுமோ? மாலை என்றதும் ஸ்ரீராமாயணத்திற்கு நன்கு பொருந்தும்; ஸ்ரீராமாயணபாராயணத்தில் திருவடிக்காக அநுஸந்திக்கப்படும் தனியன்களுள் "கோஷ்பதீக்ருதவாராசிம் மசகீக்ருத ராக்ஷஸம், ராமாயணமஹாமாலாரத்நம் வந்தே அநிலாத்மஜம்" என்பதில் ஸ்ரீராமாயணம் மாலையாகச் சொல்லப்பட்டதன்றே. இனி, சங்கம் என்றது ஸங்கம் ஸங்கமாகவிருந்து ரஸிகர்கள் அநுபவிக்கக் கூடியதென்று பொருள்படநிற்றலால் இத்தன்மை திருப்பாவைக்கும் ஸ்ரீராமாயணத்திற்குமே ஏற்கும்.

[முப்பதும் தப்பாமே] ஸ்ரீராமாயணத்தில் பல நூறு கதைகள் இருந்தாலும் ஸாரமான கதைகள் முப்பது தேறும். பெருமாளுடைய பரத்வ ஸௌசீல்ய ஸௌலப்யாதி மஹாகுணங்களைக் கண்ணாடிபோல் காட்டும் கதைகள் முப்பதென்று கொள்ளலாம். "பாதகங்கள் தீர்க்கும்" என்ற பாசுரம் பணித்த பெரியார் "கோதைதமிழ் ஐயைந்தும் ஐந்தும்" என்று ஆறைந்து முப்பதென்று காட்டினாப்போலே ஆறு காண்டங்களிலும் ஐந்தைந்து கதைகளைச் சுவைமிக்கனவாகக் கொள்ளலாம். பாலகாண்டத்தில் 1. திருவவதாரம், 2 மாமுனி வேள்வியைக் காத்தல், 3. அஹல்யா சாப விமோசனம். 4. வில்லிறுத்து வைதேஹியை மணம்புணர்ந்தது. 5. பரசுராமபங்கம். (ஆக 5.) அயோத்யாகாண்டத்தில், 1. யுவராஜபட்டாபிஷேகப்ரயத்னம். 2. கைகேசி சொல்லால் தொன்னகரம் துறந்தது. 3. குகனொடுங்கங்கைதன்னில் சீரணிந்த தோழமை கொண்டது. 4. பாதுகாபட்டாபிஷேகம். அத்ரிபகவானாச்ரமத்தில் அநஸூயாதேவிக்கும் ஸீதாதேவிக்கும் ஸம்வாதம். (ஆக 5) ............ இங்ஙனே காண்டங்கள் தோறும் ஸாரமான கதைகளை ஐயைந்தாக வகுத்துக் கொள்வது. [தப்பாமே] திருப்பாவையில் ஸ்ரீராமாயணஞ் சொல்லுவதாகத் தொடங்கி ஒன்றையேனும் அஸம்பத்தமாகச் சொல்லிவிடாமல் என்றபடி. "ஜுகூஹ ஹரிதம் வக்ஷ உபகூஹ்ய ஸம்ஹ்ருஷ்ட" என்று ஒரு தரித்ரகவி சொன்னது வெகுஜநச்லாக்யமாக இல்லாமற்போயும் சில ரஸிகர்களின் உகப்புக்காவது உறுப்பாயிராநின்றதன்றே; அப்படியுமில்லாமற் போகலாகாதென்று சிக்ஷிக்கிறபடிபோலும்.

[இங்கு இப்பரிசுரைப்பார்.] இங்கு—இந்த வித்வத்ஸதஸ்ஸில், இங்குக் குழுமிய பண்டிதர்களின் முன்னிலையில்; இப்பரிசு—திருப்பாவைக்கும் ஸ்ரீராமாயணத்திற்கும் ஐககண்ட்யமாக; உரைப்பார்—உபந்யஸிக்க வல்லவர்கள். இங்ஙனே பொருள் சொன்னபோது ஸதஸ்யர்களின் கரகோஷம் செவிப்பட்டது.

[ஈரிரண்டுமால்வரைத்தோள் செங்கண் திருமுகத்துச் செல்வத்திருமாலால்] மால்வரைத்தோள்—பெரிய மலைபோன்றதாகச் சொல்லக்கூடிய புஜபலமுடையவனென்றபடி. அன்னவன் பௌர்யவீர்யபராக்ரம புஷ்கலனேயாகக் கடவன். "ஜய ஜய மஹாவீர! மஹாதீர தௌரேய! ......அஸஹாயசூர! அநபாய ஸாஹஸ!" என்று போற்றநின்ற பெருமாளுக்கும் மால்வரைத்தோளுடைமை நன்கு பொருந்தும். [ஈரிரண்டு] "ஜாதோஸி தேவதேவேச! சங்கசக்ரகதாதர" என்னப்பட்ட கண்ணபிரானுக்கு அதுர்புஜத்வமுண்டேயல்லது இராமபிரானுக்குண்டோ? என்னவேண்டா; பம்பாஸரஸ் தீரத்திலே வந்து கண்ட திருவடி "ஆயதாச்ச ஸுவ்ருத்தாச்ச பாஹவ: பரிகோபமா:" என்று பஹுவசந ப்ரயோகம் பண்ணிச் சொன்னதற்கு உபபத்தி காட்டும் ஸ்ரீகோவிந்தராஜர் "हनुमतो भक्तत्वेन तस्य चतुर्भुजवेषेण दृश्योऽभवत्" என்று வியாக்கியானித்துள்ளது காண்க. பரமபக்தையான மண்டோதரிக்கு மிங்ஙனே காட்சியளித்ததுண்டே. [செங்கண்] "சக்ஷுஷா தவ ஸௌம்யேந பூதாஸ்மி

(நெருக்குண்ணுமல்) நிறைந்திருக்கின்றான் என்பதாம். இங்கு * பர்யாப்த வ்ருத்தி: * என்று இம்மஹான் பணித்திருப்பது பூருவர்களின் ஸித்தாந்தத்தை நன்கு அடியொற்றியதாம். பரிஸமாப்ய வர்த்தமாநத்வமே சொல்லிற்று. ரங்கராமாநுஜஸ்வாமியின் ஸ்ரீஸூக்தியென்றால் அது ஸ்வாமி ஸூக்தியோடொப்ப ஆதரணீயமன்றோ. நேராக ஸ்வாமி ஸூக்தியையே காட்டுவோம். நியாயஸித்தாஞ்ஜந—ஈச்வர பரிச்சேதத்தில் இவ்வாக்ஷேபத்தை யெடுத்துக்காட்டி "ச்ருதேஸ் து சப்தமூலத்வாத்" என்கிற ப்ரஹ்மஸூத்ரத்தையே தஞ்சமாகக்கொண்டு "யதாகமம் ஸர்வத்ர பூர்ண ஏவ பகவான்" [சாஸ்த்ரம் சொன்னபடி எம்பெருமான் எங்கும் பூர்ணனே] என்று தலைக்கட்டியருளினர். இதில் சிலர்க்கு உள்ள மருளைப் போக்குகிறேனினி.

இந்த ஸித்தாஞ்ஜனத்தில் "சதஸ்ருஷு ச மூர்த்திஷு பரிபூர்ண ஏவ" என்றருளிச் செய்துவிட்டு, உடனே "அந்யத்ர வித்யமாநஸ்ய அந்யத்ர பூர்ணத்வம் ந ஸ்யாதிதி சேத்" என்கிற ஸ்ரீஸூக்தியுள்ளது. இந்த ஸூக்திக்கு உதயம் எப்படி? என்பதொன்றையே விவேகிகள் விமர்சிக்கவேணும் * ஸர்வத்ராபி பூர்ண ஏவ * என்று ஸாதித்தவுடனே "வேறிடங்களிலுமிருக்கிற ஈச்வரன் ஒரேயிடத்தில் எப்படி பூர்ணனுயிருக்கமுடியும்?" என்று ஒருவன் ஆக்ஷேபிப்பதாக எழுதப்பட்டிருக்கிறதே, கீழ் வாக்கியத்திலிருந்துதானே இந்த ஆக்ஷேபம் தோன்றவேண்டும். இப்படி ஆக்ஷேபிக்கவேண்டும்படியான விஷயமே கீழ்வாக்கியத்தில் சொல்லி முடிக்கப்பட்டிருக்கிறதென்பது கைகொள் கனியாகக் காணகிறதே. இதை இல்லைசெய்ய யாரால்முடியும். சாகுந்தல நாடகத்தின் முடிவில் மஹாகவி ஒரு வாக்விநோதம் காட்டியுள்ளார்; அதைச் சுருக்கமாக நினைப்பூட்டுகிறேன்; குழந்தையான துஷ்யந்தகுமாரனெதிரில் ஒருத்தி ஒரு பதுமைப்பறவையைக்கொண்டு காட்டி "ஸர்வதமந! சகுந்தலாவண்யம் பச்ய" [குழந்தாய்! இந்த பக்ஷியின் அழகைப்பார்] என்று சொன்னவளவிலே 'அப்படியா? என் தாயான சகுந்தலையா? எங்கே?' என்றதாம் அக்குழந்தை. சகுந்தமென்று பக்ஷிக்குப் பெயராகையாலே 'சகுந்தத்தினுடைய லாவண்யத்தைப் பார்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. குழந்தையானது (சகுந்தலா...) என்று தன் தாயின்பெயரை ப்ரஸ்தாவித்ததாகக்கொண்டு சகுந்தலை எங்கே? என்று கேட்டதாக அமைப்பு உள்ளது. இங்கு 'சகுந்தலாவண்யம்' என்று சொல்லாமல் "விஹங்கம லாவண்யம்" என்றோ 'பக்ஷிலாவண்யம்' என்றோ சொல்லியிருந்தால் அப்போது குழந்தை 'என் தாய் எங்கே? என்று கேட்பதற்கு ப்ரஸக்தியுண்டோ? இது கவி தானுக வைத்ததொரு சமத்காரம். அப்படி ஏதேனும் இங்கு விசித்திரவாக்கின் அமைப்பு உள்ளதோ? ருஜுவான வாக்கேயுள்ளது, "ஸர்வத்ராபி பூர்ண ஏவ" என்று ஸாதித்த ஸ்வாமியின் திருவுள்ளத்தில் "அந்யத்ர வித்யமாநஸ்ய அந்யத்ர பூர்ணத்வம் கதம் பவேத்?" என்று சங்கிப்பதற்கு உறுப்பான அர்த்தமே உறைந்து கிடந்ததென்பது அசைக்கமுடியாதபடி தேறிவிட்டது. அந்த பூர்ணத்வந்தான் வஸ்துதோறும் ஸ்வரூப ஸமாப்தி யென்பது. கடைசியாக இவ்விஷயத்தை முடிக்குமளவிலும் வேறொரு சப்தத்தை யிட்டு முடிக்காமல் "யதாகமம் ஸர்வத்ர பூர்ண ஏவ பகவாந்" என்று முதல் முதலிலெடுத்த பூர்ண சப்தத்தையேயிட்டு முடித்தார். இவ்விடத்தில் க்ருத்ஸ்நப்ரஸக்திரித்யாதி பூர்வபக்ஷ ஸூத்ரத்தையும் * ச்ருதேஸ்து சப்தமூலத்வாத் * என்கிற ஸித்தாந்த ஸூத்ரத்தையும் தஞ்சமாகக் கொண்டன்றோ விவாத விஷயம் உபஸம்ஹரிக்கப்பட்டது. பிறர் சொல்லுகிறபடி ஸ்வாமிக்குத் திருவுள்ளமிருந்தால் இங்கு இந்த ஸூத்ரத்தை உதாஹரித்தது ஸர்வாத்மநா அப்ரஸக்தமாகுமே. லோக விஸஜாதீயமான அத்புத சக்திவாய்ந்த பரமபுருஷனிடத்திலே 'இது எப்படி ஸம்பவிக்கும்? அது எப்படி ஸம்பவிக்கும்? என்று வாயைத் திறவாதே என்றன்றோ ஸூத்ரகாரர் முடித்திட்டது. அது தானே இந்த ஸ்வாமியின் முடிவுக்குக் கைகொடுத்தது. அகடிதகடநாசக்தன் பக்கலிலே கூடாததொன்றில்லையென்று சொல்லித் தலைக்கட்டினுராயிற்று. இவ்விஷயத்தை அடியேன்

ப்ரஹ்மவ்யாப்தி பரிஷ்க்ரியா என்கிற க்ரந்தத்திலும் ஸித்தாந்தஸௌபாக்யத்விதீய கண்டத்திலும் வடமொழியில் வெகு விரிவாக உபபாதித்திருக்கிறேன். ஸத்ஸம்ப்ரதாயார்த்த ஸாரஸிதியில் தமிழிலேயே மிக விரிவாக விளக்கியிருக்கிறேன். .... *

## மூன்றுநாள் உபந்யாஸம்—ஜாதிநாசத்தைப்பற்றி

"தத் கர்ம யந் ந பந்தாய ஸா வித்யா யா விமுக்தயே" என்கிற ப்ரமாணம் ஸர்வஸம்ப்ரதிபந்நம். மோக்ஷார்த்தமாக உபயோகப்படும் வித்யை எதுவோ அதுவே வித்யையாகும்; அப்படியல்லாதது செருப்புக்குத்தக் கற்ற கல்வி போன்றதேயாகும் என்று இதனுல் சொல்லிற்று. ஆகவே தர்க்க பாண்டித்யத்தைக் கொண்டே பெருமைபாவிக்கலாகாதென்பது விளங்கிற்று. ஜாதியினுல் ஏற்றமும், ஆச்ரமத்தினுல் உயர்வும், கல்வியினுல் சிறப்பும், ஒழுக்கத்தினுல் உத்கர்ஷமும் பக்திப் பெருஞ்செல்வமில்லாதபோது சிறிதும் பயன்படாதென்பது தெளிவாயிற்று. இவ்வர்த்த விசேஷங்களை ஸ்ரீவசநபூஷணமும் ஆசார்ய ஹ்ருதயமும் பரக்கப் பேசியுள்ளன. இவ்வர்த்த விஷயமான விவாதம் ஸம்பிரதாயத்தில் ஒரு பெரிய விஷயமாக வுள்ளது. வர்ணாச்ரம வ்யவஸ்தையை மீறி இதர வர்ணத்தவர்களை உபசரிப்பதோ கௌரவிப்பதோ தகாது என்னுமபிஸந்தியினுல் இவ்வர்த்தத்தில் வாத விவாதங்கள் வளர்ந்திருக்கின்றன. இக்காலத்தில் இதர வருணத்தவர்கள் யோக்யதை மிகுந்தவர்களாக இருந்தாலும் அவர்கள் திறத்திலே நாம் எங்ஙனம் நடந்து கொள்ளுகிறோமென்பது அனைவர்க்கும் அபரோக்ஷம். நாமும் பிறரும் நடத்தையில் ஒரு வாசியின்றிக்கே யிருப்பது ப்ரத்யக்ஷ ஸித்தம். ஆனுல் இவ்வர்த்த விசேஷங்களை நம் பூருவர்கள் அவசியமாக எழுதிவைத்தது எதற்காகவென்றால், அவர்களுடைய காலத்திலும் பண்டைக் காலத்திலும் இருந்த லோகாதீத பரம விலக்ஷண பரமபக்த சிகாமணிகளைப் பற்றியே முக்கியமாக அருளிச் செய்ததாகும். இக் காலத்திலும் அப்படிப்பட்ட மஹா பாகவதோத்தமர்கள் *க்வசித் க்வசித்* என்றபடியே ஒரோ விடங்களிலே தோன்றுகை அஸம்பாவிதமன்று. அன்னவர் திறத்திலே நாம் ப்ரதிபத்தி குன்றுமேயிருக்கவேணுமென்பதை சிக்ஷிப்பதும் பூருவர்களின் கருத்தாகும். ஆகவே ஈண்டு இதில் விசேஷித்து உபந்யஸிக்க வேண்டிய அவசியமில்லையென்னும், சாஸ்த்ரார்த்த நிஷ்கர்ஷ ஸரணியில் ஒரு விஷயம் மாத்திரம் இங்கு நன்று தெளிவிக்க வேண்டியதாகவுள்ளது.

அவ்விஷயம் யாதெனில்; ஜாதி ஆகமாபாயியே யொழிய நசிக்காமலிருக்கக் கூடியதன்று. இதை வேதாந்த மஹாகுரு அபயப்ரதாநஸாரத்தில் * நமஸ் தஸ்மை கஸ்மைசந பவது* என்று தொடங்கும் சுலோகத்தில் "ஸுராதீசஸ்வைரக்ஷண குபித சாபாயுதவதா த்ருஷத்தாதுர்ஜாத ப்ரசமநபதாம்போஜரஜஸே" என்பதனுலும், ரஹஸ்யத்ரய ஸாரத்தில் "சிலாதேः ஸ்த்ரீத்வாதிः" என்பதனுலும் விளக்கியருளினர். ஸ்த்ரீஜாதிபோய் சிலாஜாதி ஏற்பட்டது முதலில்; பின்னை அந்த சிலாஜாதி போய் ஸ்த்ரீஜாதி ஏற்பட்டது. ஆகவே ஜாதி ஆகமாபாயியென்று வேதாந்த மஹா குருவின் திருவுள்ளமாக முடிந்தது. ... ... ... *

## மூன்றுநாளிலேயே மற்றோர் உபந்யாஸம்—உபாயாந்தரங்களின் ஸ்வரூப விரோதத்தைப்பற்றி.

ப்ரபத்தியொழிந்த மற்றையுபாயங்களானவை உபாயாந்தரங்களெனப்படும். உபாஸநம் முதலானவற்றிலே ப்ரபந்நர்களான நமக்கு ப்ராப்தியில்லை யென்பது ஸர்வஸம்ப்ரதிபந்நம். சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டுள்ள அந்த உபாயாந்தரங்களை நாம் விடுகைக்கு ஹேது என்ன? என்கிற விசாரத்திலே, அவ்வுபாயாந்தரங்களை அறிகைக்கும் அநுஷ்டிக்கைக்கு மீடான ஜ்ஞான சக்திகளில்லாமையே ஹேது

வென்று நினைக்கலாம். ஆனால் அப்படிப்பட்ட ஜ்ஞாந சக்திகள் நம்போல்வார்க்கு இல்லையாகிலும் ஜ்ஞாநசக்தி புஷ்கலர்கள் [பூர்வாசார்ய ப்ரப்ருதிகள்] பலருண்டே; அவர்கள் அநுஷ்டித்ததுண்டோ? அநுஷ்டிக்கத்தகுமோ? என்னில்; தகாது. உபாயாந்தரபரித்யாகத்திற்கு ஜ்ஞான சக்திக ளில்லாமையே ஹேதுவன்று; எம்பெருமானுக்கு அத்யந்தம் பரதந்திரப்பட்டிருக்கையாகிற ஸ்வரூபத்துக்குச் சேராதென்னுமதுவே முக்க்யஹேதுவென்று ஸதாசார்யஸித்தாந்தம். அஜ்ஞான மும் அசக்தியுமடியாக விடுவதானால் ஜ்ஞானசக்திகளுண்டாகில் அவற்றைப் பரிக்ரஹிக்கவேண்டி வருமன்றோ; ஸ்வரூபவிரோதியென்று விட்டாலன்றோ மறுவலிடாதொழிவது. ஆகவே ஸ்வரூபவிருத்தமென்னுமதுவே ப்ரதாநஹேது.

இதை ஸ்வாமி ந்யாஸதிலகத்திலே வெகு சாதுர்யமாகக் காட்டியருளினார்; எங்ஙனே என்னில்; அதுதன்னிலுள்ள சுலோகமிது;—

"ஆர்த்தேஷு ஆசுபலா ததந்யவிஷயேபி உச்சிந்ந தேஹாந்தரா
வஹ்ந்யாதேரநபேக்ஷணாத் தநுப்ருதாம் ஸத்யாதிவந் வ்யாபிநீ,
ஸ்ரீரங்கேச்வர! யாவதாத்ம நியத த்வத் பாரதந்த்ர்யோசிதா
த்வய்யேவ த்வதுபாயதீ: அபிஹிதஸ்வோபாயபாவாஸ்து மே."

இதில் ப்ரபத்திக்கு இட்டிருக்கிற விசேஷணங்களத்தனையும் பக்திவேஷ வ்யாவர்த்தகங்கள். விவரித்துக் காட்டுகிறேன் காண்மின்; [ஆர்த்தேஷு ஆசுபலா] பக்தியானது விளம்பித்துப் பலனளிக்கும்; ப்ரபத்தி அங்ஙனன்றிக்கே விரைவில் பலனளிக்கும் — ஆர்த்தப்ரபந்நர்திறத்தில். [ததந்யவிஷயேபி உச்சிந்ந தேஹாந்தரா] பக்தியானது தேஹாந்தர ஸம்பந்தத்தை யறுத்துத் தருவதில் நியதியுடையதன்று; ப்ரபத்தி நியமேந தேஹாந்தர ஸம்பந்தத்தை யறுத்துத் தரும். [வஹ்ந்யாதே: அநபேக்ஷணாத் தநுப்ருதாம் ஸத்யாதிவத் வ்யாபிநீ] பக்தியாகிற உபாயத்தின் அநுஷ்டானத்தில் அக்நிகார்யம் முதலியவை அபேக்ஷிதமாயிருக்கையாலே அது அதிக்ருதாதிகாரமாயிருக்கும். ப்ரபத்தியில் அவ்வபேக்ஷையில்லாமையாலே ஸத்யம் சொல்வதற்கு எப்படி ஸர்வரும் அதிகாரிகளோ அப்படியே ப்ரபத்தியிலும் ஸர்வரும் அதிகாரிகள். இனி இதற்கு அடுத்த விசேஷணமே ப்ரக்ருத விஷயத்திற்கு உற்று நோக்கத்தக்கது. [யாவதாத்ம நியத த்வத் பாரதந்த்ர்யோசிதா] பக்தி ஸ்வரூபவிருத்தம். ப்ரபத்தி ஸ்வரூபாநுரூபம் என்கிறது. யாவதாத்மநியதமான அத்யந்த பாரதந்த்ர்யத் துக்கு ப்ரபத்தி உசிதமாயிருக்கு மென்றபோதே ப்ரபத்திப்ரதிகோடியான பக்தி யானது அந்த பாரதந்த்ரியத்திற்கு விருத்தமாயிருக்கு மென்னுமிடம் ஸ்பஷ்ட மாகத் தெரிவிக்கப்பட்டதாயிற்றன்றோ; ஆகவே வேதாந்த குருவின் திருவுள்ளமும் உபாயாந்தரம் ஸ்வரூப விருத்தமென்பதே யென்று தேறி நின்றது. * பத்தி முதலாமவற்றில் பதியெனக்குக் கூடாமல் * என்ற செய்யுள் வேதாந்த வாசிரியருடையதாக இருந்தால் பக்தி முதலான உபாயாந்தரங்களில் பதி ஏன் கூட வில்லை? என்று கேட்கவேணும். "உபாயாந்தரங்களை ஸ்வரூப விருத்தமென்ன வொண்ணாது. இவை * அகிஞ்சநோநந்யகதி:* என்றிருக்கும் அதிகாரிக்கு ஸ்வாதிகார விருத்தங்களென்ன ப்ராப்தம்" என்றும் ஸ்வாமி ரஹஸ்யத்தில் பேசியிருப்பதுண்டு. ந்யாஸதிலகத்தி லருளிச்செய்தபடியே இவை அத்யந்த பாரதந்த்ர்ய ஸ்வரூபத்துக்குப் போராதென்கிற ஸத்ஸம்ப்ரதாய நிஷ்கர்ஷம் சாலவினிது. ... .... *

## நான்காவதுநாள் உபந்யாஸம்—ஸக்ருத்ப்ரணாமத்தைப்பற்றி

ஸத் ஸம்ப்ரதாயத்தில் ஒரு தடவை நமஸ்கரிப்ப தென்றுள்ளது. 'பலமுறை நமஸ்காரம் செய்வதனால் ப்ரத்யவாயமுண்டோ? நமஸ்காரம் என்பது நல்ல காரியமே யொழிய கெட்ட காரியமன்றே. பகவத் பாகவத விஷயங்களில் ஒரு தடவைக்குப் பல தடவையாக நமஸ்கரிப்பதனால் ஸ்வரூபம் நிறம்பெறுமே யல்லது கெட்டுப்

போய் விடாதே. ஆகவே ஒரு தடவையே நமஸ்கரிக்க வேணுமென்று ஒரு நிபந்தனை கொள்ளவேண்டுமோ? பல தடவை நமஸ்கரிக்கக் கூடாதென்று சாஸ்த்ரம் மறுக்குமோ? அப்படி சாஸ்த்ரம் மறுத்திருப்பதாகவும் தெரியவில்லையே. தேஹத்தில் சக்தியற்றவர்கள் ஒரு தடவையோ அரை தடவையோ நமஸ்கரிக்கட்டும்; சக்தியும் உத்ஸாஹமுமுள்ளவர்கள் பலமுறை நமஸ்கரித்தால் அதைக் குற்றமாகக் கொள்ளும்படி ஒரு ஸம்ப்ரதாயம் இருக்கத்தகுமோ?' என்றிங்ஙனே சங்கைகள் தோன்றக்கூடியவையுள. இதில் நம்மாசார்யர்களின் திருவுள்ளத்தை விளங்கவுரைக்கிறேன் கேண்மின். எந்த விஷயத்திலும் சாஸ்த்ரங்களின் போக்கு உச்சாவசமாயிருக்கும். "மறைப்பாற் கடலைத் திருநாவின் மந்தரத்தாற் கடைந்து" என்னுமாபோலே நூற்கடல்களை நன்கு கடைந்து நுண்பொருள்களைக் கடைப்பிடித்துப் பரமாசாரியர்கள் காட்டியருளின அனுஷ்டானமே பரம சாஸ்த்ரம். ஸக்ருத் ப்ரணம விஷயத்தில் என்ன நுண்பொருள் காணலாகும்? என்னில்; கேண்மின். நமஸ்காரத்தின் ப்ரயோஜனம் என்ன? என்பதை முந்துற முன்னம் விமர்சிப்போம். "நந்த்ரு நந்தவ்யபாவோயம் ந ப்ரயோஜந பூர்வகঃ, நீசோச்சயோஸ் ஸ்வபாவோயம் நந்த்ருநந்தவ்யதாத்மகঃ" என்று அஹிர்ப்புத்ந்யஸம்ஹிதையிலுள்ள வசனத்தை வேதாந்தவாசிரியரும் எடுத்துக் காட்டியுள்ளார். பெரியாரைக் கண்டால் சிறியார், தங்களுடைய சிறுமைக்கும் எதிர்த்தலையின் பெருமைக்கும் ப்ரதர்சகமாக நமஸ்காரம் செய்யவேணுமென்றது. வேறொரு ப்ரயோஜநமும் இதற்கில்லையென்றும் சொல்லிற்று. ஒருகால் தொழுதமாத்திரத்தினல் ஸ்வநிகர்ஷமும் பரோத்கர்ஷமும் ப்ரதர்சிதமாயிற்று. பலகால்தொழவேணுமென்கிற நிர்ப்பந்தத்திற்கு ப்ரஸக்தியில்லை. என்பதை முன்னம் நெஞ்சிற் கொள்க.

சாஸ்த்ரங்களில், ஒற்றைக்கையால் நமஸ்கரிப்பது அபசாரம், ஒரு ப்ரதக்ஷிணம் பண்ணுகை அபசாரம் என்று சொல்லியிருப்பதுபோல ஒருமுறை நமஸ்கரிப்பது அபசாரம் என்று சொல்லப்படவில்லை "ஏகேந பாணிநா யஸ் து ப்ரணமேத் புருஷோத்தமம், ந்யாய்யஸ் தஸ்ய கரச்சேதঃ" என்றும், "ஏகஹஸ்தப்ரணமச்ச ஏகஞ்சாபி ப்ரதக்ஷிணம்" என்றும் இத்தகைய ப்ரமாணங்களையே ஸ்வாமி ஸ்தோத்ர பாஷ்யாதிகளில் உதாஹரிக்கக் காண்கிறோம்.

எம்பெருமானார் ஸ்ரீ வைகுண்ட கத்யத்தில் "ப்ரணம்ய உத்தாயோத்தாய புநঃ புநঃ ப்ரணம்ய" [தொழுது எழுந்தெழுந்து மீண்டும் மீண்டும் தொழுது] என்றருளிச்செய்திருக்கும் விஷயத்தில் தெளிவுபிறப்பிக்கிறேன்; இங்கு "ப்ரணம்யஉத்தாயோத்தாய புநঃ புநঃ ப்ரணம்ய" என்றது ஓரிடத்திலேயே இருந்துகொண்டு பலமுறை நமஸ்கரிப்பதைச் சொல்லுவதன்று. அந்த வாக்யத்திற்கு முன்னே "தூராதேவ" என்றருளிச் செய்திருப்பதனல், எம்பெருமானைக் கிட்டுமளவும் காலால் நடந்து செல்லாமல் தெண்டனிட்டுக்கொண்டே வழியைக் கடந்து ஸ்ரீமந்நாராயணனை அணுகுவதாகவே அங்குப் பொருள்படும். இக்காலத்தில் இந் நிலத்தில் அஸக்ருத் ப்ரணமகர்த்தாக்கள் செய்வது போன்ற செயல் அங்கு விவக்ஷிதமன்று. தெண்டன் ஸமர்ப்பித்துக்கொண்டே போய் வழியைக்கடந்து எம்பெருமானைக் கிட்டினபிறகு அங்கு ஒரே தடவை நமஸ்கரிப்பதென்னுமது அவ்விடத்திலேயே அடுத்தபடியாகச் சொல்லப் பட்டிருக்கிறது. "யாசமாநঃ ப்ரணம்ய ஆத்மாநம் பகவதே நிவேதயேத்" என்று அந்த வாக்ய ஸமாப்தியுள்ளது காண்க. இங்ஙனல்லாமல் ஓரிடத்திலேயே நின்றுகொண்டு பலமுறை தொழுவதைத்தான் "உத்தாயோத்தாய புநঃ புநঃ ப்ரணம்ய" என்கிற வாக்கியம் சொல்லுகிறதென்று கொண்டாலும் குறையொன்றுமில்லை. "ந சாஸ்த்ரம் நைவ ச க்ரமঃ" என்கிற ரீதியிலே நூல்வரம்புக்கு அடங்காத அவ் விபூதியிலே நிகழுமது கொண்டு என்ன ஸாதிக்கலாகும்? இந்நிலத்தில் நம் பூருவாசாரியர்களின் அநுஷ்டானம் ஸக்ருத் ப்ரணமமேயென்பதை அந்த எம்பெருமானர் தாமே ஸ்பஷ்டமாகக் காட்டியுள்ளபடி பாரீர். அவ்வாசிரியர் திருவாராதன க்ரம

மருளிச் செய்கிற நித்ய க்ரந்தத்தில் "ஆராதநாபிமுகோ பவேதி மூலமந்த்ரேண ப்ரார்த்ய மூலமந்த்ரேண தண்டவத் ப்ரணம்ய உத்தாய ஸ்வாகதம் நிவேத்ய" என்றருளிச் செய்திருப்பது ப்ரஸித்தமிறே. இதுகொண்டு ஸ்ரீ வைகுண்டகத்ய ஸ்ரீ ஸூக்தியின் பொருளை நாம் விவரித்தபடியே தெளிய ப்ராப்தம். இனி வேதாந்த வாசிரியருடைய திருவுள்ளத்தை உபபாதிக்கிறேன்.

ஸ்தோத்ர ரத்நத்தில் இருபத்தோராம் ச்லோகத்தில் "நமோ நமஃ நமோ நமஃ" என்று பலகால் அருளிச் செய்திருப்பதை ஸமந்வயப்படுத்தத் திருவுள்ளம் பற்றிய ஸ்வாமி அவ்விடத்து (ஸ்தோத்ர) பாஷ்யத்தில், "ப்ரசம்ஸாயாம் ப்ரதிஜ்ஞாயாம் ப்ரலாபே தர்ஜநேபி ச, பயே ச விஜயே சைவ பௌநஃபுந்யமலங்க்ருதிஃ" என்கிற வொரு ச்லோகத்தை யெடுத்துக் காட்டியுள்ளார். இந்த ச்லோகத்தின் பொருளை விவேகிகள் விமர்சிக்கவேண்டும். ஸ்தோத்ரம் செய்தல், ப்ரதிஜ்ஞை செய்தல், அழுதல், வெருட்டுதல், அச்சந் தோற்றச் சொல்லுதல் முதலிய ஸந்தர்ப்பங்களில் ஒரு சொல்லையே அடுத்தடுத்துச் சொல்லுவதானது ஒரு வகையான அலங்காரமாகும் என்பது இந்த ச்லோகத்தின் பொருள். உலகத்தில் இதை நாம் நன்றாகக் காண் கிறோம். "பாம்பு பாம்பு பாம்பு" என்று பலமுறை சொன்னாலும் உள்ளது ஒரு பாம்பே யல்லது பல பாம்புகள் வந்துவிடமாட்டா, * பல்லாண்டு பல்லாண்டு பல்லா யிரத்தாண்டு பலகோடி நூறாயிரம் * என்று நூறாயிரந் தடவை சொன்னாலும் 'விஜயீபவ' என்று ஒருகால் சொல்வதற்கு என்ன அர்த்தமோ அந்த அர்த்தமே யன்றோ தேறுவது. அப்படியே * நமோ நமஃ * தொழுது தொழுது தொழுது * என்று எத்தனை பரியாயம் சொன்னாலும் அது சப்தாலங்கார மத்தனையென்று ஸ்வாமி நிர்ணயித்தருளினாராயிற்று. அஸக்ருத் நமஸ்காராநுஷ்டானம் இருந்திருக்கு மாகில் இங்ஙனே யெழுதி யிருப்பரா வென்பதை ப்ராமாணிகர்கள் விமர்சிப்பது. ....*

## உலகம் முழுவதும் துயர்க்கடலில் ஆழ்ந்துள்ளது!

27—5—1964 புதன்கிழமையன்று பகல் 2-மணிமுதல் 4-30 மணிவரை உபந்யாஸம் நடந்து முடிந்து ஸதஸ்ஸூ கலையு மளவில் உலகமெல்லாம் துக்கசாகரத்தில் ஆழும்படியான செய்தியொன்று செவிப்பட்டது. உலகம்போற்றும் புகழ்வாய்ந்த

# கனம் ஜவஹர்லால் நேரு

அவர்கள் டில்லிமாநகரில் பரகதியடைந்த செய்தியைக்கேட்டு வருந்தாத ஜனம் இல்லை. இடி விழுந்தாற் போன்ற இந்த சம்பவம் உலகத்தையே குலுக்கி விட்டது. காஞ்சீ ஸ்ரீவரத ராஜப் பெருமாளுக்கு நடந்து கொண்டிருந்த வைகாசித் திருவிழாவில் முப்பது மணிகாலம் பெருமாள் இடம் விட்டுச் சலிக்கவில்லை, சமாதானமடைய முடியாத துக்கமன்றோவிது. கனம் நேருஜீ அவர்களின் ஆத்மா சாந்தி யடைந்திடுக. நாமும் ஒருநாள் பூர்த்தியாக உபந்யாஸம் நிறுத்தியிருந்தோம்.

இங்ஙனம்: பத்ராதிபர் **P. B. A.**

# ஐந்தாவதுநாள் உபந்யாஸம்

## அத்ருஷ்டார்த்தமென்னும் சரணாகதியனுஷ்டானத்தைப்பற்றி

பரம புருஷார்த்தமான அரும்பெரும்பேறு பெறுதற்கு உறுப்பாக நாம் ஒரு ஸதாசார்யரை ஆச்ரயிக்கிறோம்; என்றைக்கு ஆச்ரயிக்கிறோமோ அன்றைக்கு நமக்கு ஸமாச்ரயணமானதாகத் தொன்றுதொட்டு வ்யவஹாரம் நிகழ்ந்து வருகிறது. திருவாழி திருச்சங்குகளினால் இலச்சினை பெறுகையாகிற சக்ராங்கனத்தையே ஸமாச்ரயணமென்று உலகம் க்ரஹித்திருக்கின்றது. உண்மையில் ஸமாச்ரயண மென்பது அவ்வளவேயன்று. "ஆசார்யனை ஆச்ரயித்து அவன் மூலமாக எம்பெருமானை யடிபணிதல்" என்றும் பொருளதான ஸமாச்ரயணமென்கிற சொல்லானது ஆசார்யனால் பெறுவிக்கப்படுகிற பேறுகளுக்கெல்லாம் ஸூசகமாக நிற்கின்றது. ஆசார்யனால் க்ருதக்ருத்யனாகச் செய்விக்கப் பெறுகையே ஸமாச்ரயணமெனப் படுகிறது. பகவதாச்ரயணத்தில் பர்யவஸிதமாகிறது. இந்த ஸமாச்ரயணத்தையே பஞ்ச ஸம்ஸ்காரமென்கிற சொல்லாலும் வழங்கி வருகிறார்கள். "தாப: புண்ட்ரஸ் ததா நாம மந்த்ரோ யாகச்ச பஞ்சம:, அமீ பரமஸம்ஸ்காரா: பாரமைகாந்த்ய ஹேதவ:" என்று யாவருமறிந்த ச்லோகமானது பஞ்சஸம்ஸ்காரங்கள் இன்னின்னவை யென்பதை விவரித்துக் காட்டுகின்றது. தாப: என்பது முதல் ஸம்ஸ்காரம். அதுதான் தப்த சக்ராங்கனமென்பது. திருவிலச்சினை யென்பது ஸம்ப்ரதாய வழக்கு. இரண்டாவதான புண்ட்ரஸம்ஸ்காரமாவது த்வாதசோர்த்வ புண்ட்ரதாரணம் செய்வித்தல். மூன்றாவதான நாமஸம்ஸ்காரமாவது "இந்த சிஷ்யன் ஸ்ரீ வைஷ்ணவனாயினான்" என்பதை விளங்கக் காட்டுகின்ற தாஸ்யநாமகரணம். அவரவர்களின் ஸம்ப்ரதாயப்படி ராமாநுஜ தாஸனென்றும் மதுரகவி தாஸனென்றும் ஸ்ரீ வைஷ்ணவ தாஸனென்றும் இப்புடைகளிலே வழங்கிவருவன காண்க. இனி நான்காவதான மந்த்ர ஸம்ஸ்காரமாவது—திருமந்த்ரம் த்வயம் சரமச்லோகம் என்கிற ரஹஸ்யத்ரயத்தை உபதேசிக்கப் பெறுகை. ஐந்தாவதான யாகமாவது "யஜ—தேவபூஜாயாம்" என்கிற தாதுவிலிருந்து தேறுகிற யாகசப்தம் திருவாராதனத்தைச் சொல்லுகிற தாகையாலே பகவதாராதனத்திற்கு அதிகாரம் பெறுகை. இதற்கு மற்றொரு வகையாகவும் பொருள் கூறுவர். அது நிற்க.

இவற்றுள் நான்காவதான மந்த்ரஸம்ஸ்காரத்தில் த்வயமென்கிற மந்த்ரரத்நமே மிகச் சிறந்தது. ஸமாச்ரிதனான சிஷ்யனை அந்த மந்த்ரரத்நமே க்ருதக்ருத்யனாக்குகின்றதாக நம் ஆசார்யர்களனைவருடையவும் ஸமகண்டமான ஸித்தாந்தம். இதனாலேயே ஸமாச்ரயண நிஷ்பத்தி யென்றுணர்க. இதுதன்னை ரஹஸ்ய க்ரந்தத்திலே ஸுவ்யக்தமாக எழுதிவைத்து சிலாலிகிதமாக்கிவைத்தவர் வேதாந்த வாசிரியர். எங்ஙனே யென்னில்; ஸ்ரீ ரஹஸ்யத்ரயஸார க்ருதக்ருத்யாதிகாரத்தில்—

> "அநாதிகாலம் ஆஜ்ஞாதிலங்கனமடியாகவுண்டான பகவந்நிக்ரஹத்தாலே ஸம்ஸரித்துப் போந்த நமக்கு அவஸரப்ரதீக்ஷையான பகவத்க்ருபையடியாக வுண்டான ஸதாசார்ய கடாக்ஷவிஷயீகாரத்தாலே வந்த த்வயோச்சாரணாநுச் சாரணத்தாலே ப்ரபத்த்யநுஷ்டானம் பிறந்த பின்பு சரண்ய ப்ரஸாதநங்களில் இதுக்குமேல் ஒன்றில்லாமையாலே நிக்ரஹஹேதுக்களை யெல்லாம் க்ஷமித்துத் தீர்ந்தவடியவர் தம்மைத் திருத்திப் பணிகொள்ளவல்ல ஸர்வசேஷியான ச்ரிய:பதி தன்பேறாகத் தானே ரக்ஷிக்குமென்று தேறி நிர்ப்பரனாயிருக்கை. இது *மாசுச:* என்கிற சரண்ய வாக்யத்திலும் தீர்ந்தபொருள்."

என்றுள்ள வாக்கியங்கள் நிஸ்ஸந்தேஹவிபர்யயமாக உண்மைப்பொருளை புணர்த்துகின்றன. மேலே உதாஹரித்த வாக்கியராசியில் "த்வயோச்சாரணாநுச்

சாரணத்தாலே ப்ரபத்த்யநுஷ்டாநம் பிறந்த பின்பு" என்றும் "சரண்ய ப்ரஸாதநங்களில் இதுக்கு மேல் ஒன்றில்லாமையாலே" என்றுமுள்ள ஸ்ரீஸூக்திகள் ஸாரமானவை. மந்த்ரஸம்ஸ்கார ஸமயத்தில் த்வய மென்னும் மந்த்ரத்தை ஆசார்யன் சொல்ல அதை சிஷ்யன் பின்சொல்லுவதுண்டே இதுதான் ப்ரபத்த்யனுஷ்டானமென்று சொன்னதோடு நில்லாமல் இதற்குமேல் வேறொன்று கிடையாதென்றும் ஸுவ்யக்தமாக அருளிச் செய்தாராயிற்று.

இங்ஙனே தமிழில் அருளிச்செய்ததை சரணாகதிகத்யபாஷ்யத்தின் முடிவில் ஸம்ஸ்க்ருதத்திலுமருளிச்செய்துள்ளனர்; இப்படியிருக்க, நவீனர்கள் அத்ருஷ்டார்த்தமென்று ஒன்று நடத்திப்போருவதானது சாஸ்த்ரங்களிலும் ஸதாசார்யாநுஷ்டாந பரம்பரையிலும் எங்கும் அத்ருஷ்டமான அர்த்தமாதலால் அத்ருஷ்டார்த்தமென்று இதற்குப் பெயரிட்டது மிகவும் பொருத்தமானதே. எம்பெருமானாருடைய சிஷ்ய பரம்பரையிலே ஜனித்தவர்களுக்கு ப்ரபந்நத்வமோ சரணாகதத்வமோ ஜன்மஸித்தமேயாகும். அன்னவர்கள் பஞ்ச ஸம்ஸ்காரம் செய்துகொள்வதானது வைஷ்ணவ தீக்ஷார்த்தமாக வத்தனையல்லது மோக்ஷஸாதனமாகவன்று. நம்முடைய குலகூடஸ்தரான எம்பெருமானார்க்கு ஸ்ரீரங்கநாதனிடமிருந்து விசேஷித்து வரமும் கிடைத்திருக்கிறது. அதையும் ஸ்வாமிதாமே ந்யாஸதிலகத்தில் 'ச்ருத்வா வரம் தததநுபந்த மதாவலிப்தே" என்பதனால் நன்கருளிச் செய்துள்ளார். அந்த திவ்ய க்ரந்தத்தில் * அந்தோநந்தக்ரஹண * என்றும் * உத்த்யா தநஞ்ஜய * என்றுமுள்ள இரண்டு ச்லோகரத்னங்கள் நிதியானவை,

அந்தோநந்த க்ரஹணவசகோ யாதி ரங்கேச! யத்வத்
பங்குர் நௌகாகுஹரநிஹிதோ நீயதே நாவிகேந,
புங்க்தே போகாந் அவிதிதந்ருபஸ் ஸேவகஸ் யார்ப்பகாதி:
த்வத்ஸம்ப்ராப்தௌ ப்ரபவதி ததா தேசிகோ மே தயாலு:"

இந்த ச்லோகத்தில் ஜ்ஞாநஹீநனை ஒருவன் குருடனுடைய ஸ்தானத்திலும் ஆசாரஹீநனை வொருவன் நொண்டியினுடைய ஸ்தானத்திலும் கொள்ளப்பட வேண்டியதாகத் தேறும். இப்படிப்பட்ட அதிகாரிகள் ஞானமனுட்டானமிவை நன்றாகவேயுடையனான குருவையடைந்தே புருஷார்த்தஸித்தி பெறவேண்டுமென்கை.

இதற்குமேல் மூன்றாவதானவொரு த்ருஷ்டாந்தம் (மூன்றாவது பாதத்தில்) வெகு அற்புதமாகக் காட்டப்பட்டிருக்கிறது. *புங்க்தே போகாந் அவிதிதந்ருபஸ் ஸேவகஸ்ய அர்ப்பகாதி: * என்கிற த்ருஷ்டாந்தம் மிக அற்புதமானது. ராஜஸேவை பண்ணின அமாத்யனுடைய ஸந்ததியார்கள் பலனையநுபவிக்கும்போது அந்த ராஜாவின் முகத்தைப்பார்த்திருக்கவேண்டியதில்லையன்றோ; அந்த ராஜாவைப் பற்றி ஒன்றுமே தெரிந்துகொண்டிருக்கவேண்டியதில்லையே. 'தாம் அமாத்யனுடைய ஸந்ததியே' என்னுமிடத்தை மூதலிக்கவேண்டியதொன்று தவிர வேறொரு க்ருத்யமும் இல்லையன்றோ தத்ஸந்ததியார்க்கு; இதுதான் 'அவிதிதந்ருப:' என்கிற விசேஷணத்தினால் தெரிவிக்கப்படுகிறது. இதுபோலவே, அமாத்ய ஸ்தாநீயரான எம்பெருமானாருடைய ஸந்ததியான நாமும். 'நாம் எம்பெருமானாரைச் சேர்ந்தவர்கள்' என்பதை மூதலிப்பது தவிர பேற்றின்ஸித்திக்காகப் பெருமாளுடைய திருமுகத்தையும் காணவேண்டிய ஆவச்யகதையில்லையென்று ஸ்பஷ்டமாகத் தெரிவித்ததாகிறது. நம்முடைய பூர்வாசார்யர்களின் சரிதைகளில் திருவிலச்சினைக்கு மேற்பட்டவொரு அத்ருஷ்டார்த்தானுஷ்டானமென்பது எங்குங்காணக்கிடைக்காதது.

இவ்விஷயத்தில் ஸாரம [illegible] சொல்லி முடிக்கிறேன். ந்யாஸதிலகமென்பது
ப்ரபத்திவிஷயத்தில் மிகச் சிறந் [illegible] நூல். அதில் "அந்தோநந்த க்ரஹணவசக:, *உத்த்யா
தநஞ்ஜய" என்கிற இரண்டு [illegible] லோகங்களும் திலகமானவை. *அந்தோநந்த
ச்லோகத்தைக் கீழே விவரித் [illegible] ன். அதில் பூர்வார்த்தத்தில் காட்டின இரண்டு

த்ருஷ்டாந்தங்கள் ஆசார்ய சிஷ்யர்களின் ஸமகாலிகத்வத்தை யுட்கொண்டவை. உத்தரார்த்தத்தில் காட்டின ராஜஸேவக வம்ச பரம்பராத்ருஷ்டாந்தம் வ்யவஹித காலவர்த்திகளுக்கும் பேறு தப்பா தென்பதை உட்கொண்டது. அத்யந்தம் வ்யவஹித காலவர்த்திகளுக்கும் பேறுதப்பா தென்னுமிடத்தை ஸ்ரீபாஷ்யத்தின் மங்களச்லோகத்தில் "விநதவிவித பூதவ்ராதரக்ஷைகதீக்ஷே" என்றவிடத்து ச்ருத ப்ரகாசிகையில் உபபாதித்திருப்பதை ஸேவித்த வேதாந்த வாசிரியர் தத்வடீகையில் அதேயிடத்தில் விபுலமாக நிரூபித்து அதைத் திடப்படுத்தினர். நியாஸதிலகத்தில் *உக்த்யா தநஞ்ஜய* இத்யாதி ச்லோகத்தாலே ஒரு அஸாதாரண விஷயமருளிச் செய்கிறார். அதுதான் உயிரானது. "ச்ருத்வா வரம் ததநுபந்த மதாவலிப்தே" என்கிற மூன்றாம்பாதம் ஜீவநாடியானது. இதில் ஸ்ரீரங்கநாதன் ஸ்ரீபாஷ்ய காரர்க்கு ஒரு வரம் கொடுத்ததாகச் சொல்லப்பட்டுள்ளது. அந்த வரம் இன்னவித மென்பதை (நியாஸதிலக) ஸம்ஸ்க்ருத த்ராவிட வ்யாக்க்யாதாக்கள் நிஸ்ஸந்தேஹ மாக எழுதி வைத்துள்ளார்கள். ஸம்ஸ்க்ருத வியாக்கியானம் பலகால் அச்சிடப்பட்டு உலகம் பரவியிருக்கின்றது. பகவத் ராமாநுஜ ஸம்பந்த ஸம்பந்த ஸம்பந்திகளுக் கெல்லாம் ஸ்ரீராமாநுஜ ஸம்பந்தமே ஹேதுவாக முக்தியுண்டாகக் கடவதென்று வரமளித்ததாக வியாக்கியானங்கள் உண்மையை மறைத்திடாமல் வெளியிட்டுள்ளன. இவற்றை யச்சிட்டவர்களோ பரமைகாந்திகளான திருக்குடந்தை வித்வன் மணிகள்.

வரஸ்வரூபத்தை இங்ஙனே யிசைந்தால் நம்முடைய ஆசாரம் அவலக்ஷணமாய் விடுமென்று கொண்ட நவீனர்கள் "அப்படியன்று வரம்; இப்படி காணும்" என்று மரத்தின் நுனியிலே யுட்கார்ந்து அடிமரத்தை வெட்டுகிற கணக்கிலே சொல்லப் புறப்பட்டார்கள். ஸ்வாமி "ச்ருத்வா வரம்" என்றவுடனே 'ததநுபந்த மதாவலிப்தே" என்று ஸாதித்திருக்கிறாரே, இதற்குச் சேர வரஸ்வரூபத்தைச் சொல்ல வேண்டுமே! என்று நாம் சொன்னவுடனே திகைத்து நின்றார்கள். பகவத் பாஷ்யகாரரோடு வ்யவஹித ஸம்பந்தங் கொண்ட ஸ்வாமி வேதாந்தகுரு "ததநுபந்த மதாவலிப்தே" என்னும்போது அநுபந்தத்தைக் கவ்வியன்றோ வரஸ்வரூபம் நிரூபிக்கப்பட வேண்டும் என்ற வாறே ஆமாம்! ஆமாம்!! என்று அஞ்ஜலிபந்தம் பண்ணிச் சென்றார்கள். ஆக இவ்விஷயத்தில் மற்ற வீண் விரிவுரைகளை விட்டிட்டு "ச்ருத்வா வரம்" என்றதொன்றையே விமர்சித்தல் பாங்கு. "ஜ்ஞாத்வா வரம்" என்னாதே ச்ருத்வா என்றதன் ஸ்வாரஸ்யத்தையும் உணரவேணும். "ஆப்தை: ச்ராவிதம்" என்கிறார்கள் வியாக்க்யாதாக்கள். ஆகவே அநாப்தர்கள் கூறுமது இங்கு விலை செல்லாதென்க. .... .... .... .... .... *

## ஆறுவதுநாள் உபந்யாஸம்—பகவத்க்ருபை நிர்ஹேதுகம்

பகவத்க்ருபையை நிர்ஹேதுகமென்று கொண்டால் ஸர்வமுக்தி ப்ரஸங்கம் வருமென்றும் வைஷம்யநைர்க்ருண்யாபத்தியைப் பரிஹரிக்கின்ற "வைஷம்யநைர்க் ருண்யே ந ஸாபேக்ஷத்வாத்" என்கிற ப்ரஹ்ம ஸூத்ரம் விரோதிக்குமென்றும் சில வாதங்கள் கிளம்புவதுண்டு. உலகத்திலுள்ள ஸகல ப்ராணிகளிடத்திலும் எம்பெரு மான் நிர்ஹேதுகமாகவே அருள்செய்வதாகக் கூறினால்தான் மேற்சொன்ன வாதங் களுக்கு ப்ரஸக்தியுண்டாகும். அப்படி யாரும் கொள்வதில்லை. அதிகாரி விசேஷங்க ளிடத்தில் நிர்ஹேதுகமாக அருள்செய்கிறானென்றே ஸகலாசார்யர்களுமருளிச் செய்வது. இக்கொள்கையில் வேதாந்தவாசிரியர் முன்னிலையில் நிற்பவர். நிர்ஹேதுக க்ருபையைப்பற்றிப் பலவிடங்களிற் பேசுகிறார். சிலவிடங்கள் காட்டுகிறேன்.

பரமபத ஸோபாநத்தில்—"அஜ்ஞாத யாத்ருச்சிக ஆநுஷங்கிக ப்ராஸங்கிக ஸாமாந்ய புத்திமூல ஸுக்ருத விசேஷங்களை வியாஜமாகக்கொண்டு விசேஷ கடா

க்ஷம் பண்ணி'' என்றருளிச்செய்தா
ஸஹியாமல் அவ்யாஜக்ருபையையு
என்னில்; திருவாய்மொழியில் முதற்
பதிகத்திற்கு ஆறாயிரப்படியிலில்லா
வியாக்கியானங்களிலுள்ளது. அ
டைய நிர்ஹேதுக க்ருபாப்ரபாவ
ளினதாகக் காட்டப்பட்டது. அந்
நிஷத்தாத்பர்யரத்நாவளியில் "அ
"அவ்யாஜோதார பாவாத்" என்
கையாலே என்றபடி. இவ்விடத்
நிர்ஹேதுகக்ருபாவானைச் சொன்
இல்லாமல் அதற்குப்பின் தோன்ற
இதையே ஆதரித்துப் பரிக்ரஹித்
யாதெனில்; ஆறாயிரப்படிக்குப் பி
அபார்த்தங்களை யெல்லாம் நிகம
களைந்தொழித்தார் நம்தேசிகனெ
களைக் கிள்ளிக் களைந்ததேயாம்.
டிய பரமபத ஸோபாந ஸ்ரீஸூக்
ஆரம்பத்திலுள்ளதான

இதில் "வ்யாஜமாகக்கொண்டு" என்றதையும்
அருளிச்செய்து போந்தார். அது எங்கே
தில் *பொருமா நீள்படையென்கிற பத்தாவது
விஷயம் அவ்வாறாயிரப்படிக்குப் பிற்பட்ட
து, இப்பதிகத்தினால் ஆழ்வார் எம்பெருமானு
யநுபவிக்கிறாரென்று பட்டர் நிர்வஹித்தரு
வாஹத்தையே ஸ்வாமி ஆதரித்து த்ரமிடோப
வித்தம் பரத்வா...." என்கிற ச்லோகத்தில்
ளிச்செய்தார். நிர்ஹேதுகக்ருபா விசிஷ்டனு
இரண்டு விசேஷங்கள். (1) எம்பெருமானை
ஒன்று; (2) இவ்விஷயம் ஆறாயிரப்படியில்
வியாக்கியானங்களில்மட்டும் விளங்காநிற்கவும்
மற்றொன்று. இவற்றால் தேறும் பரமார்த்தம்
தோன்றியுள்ள வியாக்கியானங்களிற் காணும்
ளமென்னும் சுகனாவிந்த பரிமள க்ரந்தத்தில்
ஆகாசதாண்டவமாடினவர்களின் குஜல்பிதங்
ந்த கெட்டத்தில் முந்துற முன்னமெடுத்துக்காட்
னது, ஸ்ரீவசநபூஷணம் நான்காவது ப்ரகரணம்

**"த்ரிபாத்விபூதியிலே பரிபூர்**
**பேரைச் சொன்னாய் என்ன**
**அவர்களுக்கொதுங்க நிழ**
**மடிமாங்காயிட்டு........ ஜ**
**ஆநுஷங்கிகமென்கிற ஸுக்**
**ஒன்று பத்தாக்கி நடத்திக்**

**பவம் நடவாநிற்க........என்னாரைச் சொன்னாய் என்**
**ாரை நோக்கினாய் அவர்கள் விடாயைத் தீர்த்தாய்**
**கொடுத்தாய் என்னுமாபோலே சிலவற்றை ஏறிட்டு**
**பரம்பரைகள் தோறும் யாத்ருச்சிகம் ப்ராஸங்கிகம்**
**விசேஷங்களைக் கற்பித்துக்கொண்டு தானே அவற்றை**
**ண்டு போரும்"**

என்கிற ஆச்சரியமான சூர்ணை
திடமாகத்தரித்தும் போந்தவ

ப நம் வேதாந்தகுரு அநவரதம் சிந்தனைசெய்து
தைப் பேதையருமறியும்படி அமைந்துள்ளது.

"நிஷாதாநாம் நேதா க
ரத்நத்தின் பொருளை உபந்யஸி
சபரி குசேலர் கூனி ஆய்ச்சிய
கண்ணபிரானுடையவும் நிர்
வேறொன்று சொல்லிப் பிழை

குலபதி: காபி சபரீ" என்கிற தயாசதக ச்லோக
ப்புக்கால் குஹப்பெருமாள் ஸுக்ரீவ மஹாராஜர்
ாலாகாரர் என்னுமிவர்கள் இராமபிரானுடையவும்
துக கருணைக்கு இலக்கானவர்கள் என்றல்லது
வொண்ணாதாயிற்று.

ஸ்தோத்ர க்ரந்தங்களி பணிப்பது ப்ரசம்ஸைகபரமாதலால் அதுதன்னை சாஸ்த்ரார்த்தமாகக் கொள்ள வொண்ணாதென்று கூறுவருவர்கள். முநிவாஹந போகமென்று பெயரிட்டு ரஹஸ்யக்ரந்தமாகப் பணித்த அமலனாதிபிரான் வியாக்கியானத்தின் உபக்ரம ஸ்ரீஸூக்தி இது காணீர்;—"காரணவிசேஷம் இன்னதென்று அறுதியிட அரிதாயிருப்பதொரு பகவத்கடாக்ஷத்தாலே அயத்நலப்தமான.........." என்று. இவ்விஷயத்தில் இவ்வளவேபோதும். ஒரு ஹேதுவில்லாமல் எம்பெருமான் அருள் செய்யமாட்டானென்கிற வாதம் ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டிகளில் விலை செல்லுமதன்று. * நாஸௌ புருஷகாரேண ந சாபி அந்யேந ஹேதுநா, கேவலம் ஸ்வேச்சயைவாஹம் ப்ரேக்ஷே கஞ்சித் கதாசந * என்பதன்றோ எம்பெருமானுடைய திருமுகப்பாசுரம். .... .... .... .... .... *

# ஏழாவதுநாள் உபந்யாஸம்
# சேதநனைப் பெறுவது ஈச்வரனுக்குப் பேறு.

ஸம்பிரதாயத்தில் சேதநலாபம் ஈச்வரனுக்குப் பேறு? ஈச்வரலாபம் சேதனனுக்குப் பேறு? என்கிற விசாரம் தலைமைபெற்றிருக்கும். இந்த விசாரத்தின் முடிவை உள்ளபடி தெரிந்துகொண்டால் பல சிக்கல்கள் அறும். சாஸ்த்ரங்களை மேலெழப் பார்க்கும்போது 'ஈச்வரனை அடைவது சேதநனுக்குப் பேறு' என்பதாகவே தோற்றி நிற்கும். ஈச்வரனை ப்ராப்யனென்றும், சேதநனை ப்ராப்தாவென்றும் ஸ்பஷ்டமாகப் பலவிடங்களிலும் சொல்லியிருக்கையாலே 'ஈச்வரலாபம் சேதநனுக்குப் புருஷார்த்தம்' என்றே கிரஹிக்கநேரும். நவீனர்கள் இப்படியே மதமாகக் கொண்டிருக்கிறார்கள். "ஈச்வரனுக்குத்தான் சேதநலாபம் புருஷார்த்தம்" என்பது ஸித்தாந்தஸாரம். வேதாந்தவாரியருடைய திருவுள்ளமும் சேதநலாபம் ஈச்வரனுக்குப் பேறு என்பதேயாம். இதனை அவர் கீதாபாஷ்யதாத்பர்ய சந்த்ரிகையில் வெகு அழகாகக் காட்டியுள்ளார். கீதையில் ஒன்பதாமத்யாயத்தின் முடிவிலுள்ள *மந்மநா பவ* என்கிற ச்லோகத்தின் பாஷ்யத்திற்கு விவரணமெழுதுகையில்—"ஆச்ரித ஸம்ரக்ஷணம் ஸ்வலாபம் மத்வா ப்ரவர்த்ததே" என்றருளியிருக்கிறார்.

சேதநனைப் பெறுவது ஈச்வரனுக்குப் பேறு என்றால் இவ்வர்த்தம் ஹ்ருதயத்தில் அவகாஹிப்பது சிரமமேயாகும். ஆனாலும் எளிதாக உணர்த்துகிறேன். சேதநன் முக்தனாகிப் பரமபதத்தில சென்றபின் அங்கு என்ன கோஷிக்கிறானென்பதை நம் உபநிஷத்து தெரிவிக்கின்றது. [அஹமந்ந மஹமந்ந மஹமந்நம்] என்பது முக்தனுடைய முதல் வார்த்தை. 'பகவானுக்கு நான் அன்னமாகிறேன்' என்று ஒரு தடவைக்கு மூன்று தடவையாக இதில் சொல்லுகிறது. இதனால்; ஈச்வரனைவன் சேதநனைப் பெற்று அநுபவிக்க வேணுமென்று பெரும்பசி கொண்டிருந்தானென்றும், அப்பசி முக்தாத்மாவால் முதலில் தீருகிறதென்றும் ஸ்பஷ்டமாகிறது. இல்லையாகில், *அஹமந்நம்* என்று ஓதவேண்டியதில்லை யன்றோ.

"கஸ்தூரி கிடைப்பது மிகவும் அரிதாயிருக்கின்றது" என்று ஒருவன் சொன்னால் அவன் கஸ்தூரியைப் பெறுவதற்கு மிகவும் முயற்சி செய்பவன் என்பது எளிதாகத் தெரியவருமன்றோ. இதேபோல, எம்பெருமான் "வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:" என்று கீதையில் சொல்லுகிறான். 'எனக்கு எல்லாம் கண்ணன' என்றிருக்கிற மஹாத்மா எனக்குக் கிடைக்கவில்லையே யென்கிற வருத்தத்தையன்றோ இதில் காட்டுகிறான். எம்பெருமான்தான் அப்படிப்பட்ட சேதனனைப் பெறுதற்குப் பெருமுயற்சி செய்பவனென்பது இதனால் ஸ்பஷ்டமாக விளங்கவில்லையா? இல்லையாகில் ஸுதுர்லப: என்பனே?

ஒரு வஸ்துவைப் பெறுவதனால் ஆனந்தம் உண்டாவது எவனுக்கோ அவன்தான் பேறுபெறுபவன் என்பது நிர்விவாதமான விஷயம். சேதநனைப் பெறுவதனால் ஆநந்திப்பவன் எம்பெருமானென்பது தேறிவிட்டால் அவனே லாபமடைபவன் என்பதும் அநாயாஸமாகத் தேறிவிடுமன்றோ. ஆளவந்தார் "கதாஹமைகாந்திக நித்ய கிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி ஸநாத ஜீவித:" என்றார். இதில் ப்ரஹர்ஷயிஷ்யாமி என்கிற க்ரியாபதம் ஆச்சரியமாக அமைந்தது. உனக்குத் தொண்டு செய்து நான் எப்போது ஆநந்திக்கப்போகிறேனென்னாமல் 'நான் எப்போது உன்னை ஆநந்திப்பிக்கப்போகிறேன்' என்றார். ணிஜந்தப்ரயோகம் நோக்குக. இங்கு வியாக்யானத்தில்—"தன்னுடைய அநுவ்ருத்தியால் ஈச்வரனுக்குப் பிறக்கும் ஹர்ஷமேயிறே சேதநனுக்கு ப்ராப்யம்" என்று பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்ததை ஸ்தோத்ரபாஷ்யத்தில் ஸ்வாமி அப்படியே மொழிபெயர்த்தார்—"[ப்ரஹர்ஷயிஷ்யாமி] த்வத்தாஸ பூதஸ்ய மே த்வத்ப்ரஹர்ஷ ஏவ ப்ரதாநம் ப்ரயோஜந மிதி பாவ:" என்று,

இவற்றுக்கெல்லாம் சிகரமாக விளங்குவது "நச பரம புருஷஸ் ஸத்ய ஸங்கல்பः......" இத்தியாதியான ஸ்ரீபாஷ்ய ஸூக்தி. இதில் "பரமபுருஷः ஜ்ஞாநம் லப்த்வா" என்றது உயிரான ஸூக்தியன்றோ. இதையே வேதாந்தகுரு பலவிடங்களில் பலமுகமாக விவரித்தருளினாராயிற்று. "உபஸ்திதம் ஜ்ஞாநம்" என்னாமல் லப்த்வா என்றாரிறே.

ஞானங்களில் மேலெழுந்த ஞானமென்றும் ஆழ்ந்த ஞானமென்றும் இருவகையுண்டு; அப்படியே விஷயங்களும் இருவகைப்பட்டிருக்கும். சேதநலாபம் பரமபுருஷனுக்குப் பேறு என்னுமிவ்விஷயமும், பரகதஸ்வீகாரமே ப்ரசஸ்தமென்னும் அடுத்த விஷயமும் ஆழ்ந்த ஞானத்தினால் அறியத்தக்கவை. இவ்விஷயங்களில் ஸ்மார்த்த மாத்வாதிகளுக்கு ப்ரவேச ப்ரஸக்தியே கிடையாது. இவற்றை ஆழ்ந்து அநுபவிக்க ஸ்ரீவைஷ்ணவர்களே இட்டுப் பிறந்தவர்கள். ஏனென்றால், இவை ரஹஸ்யங்களில் நுட்பமாகத் தேறுமவை. ரஹஸ்யாதிகாரிகள் எம்பெருமானார் திருவடி ஸம்பந்திகளான ஸ்ரீவைஷ்ணவர்களே யல்லது மற்றையோர்களல்லர். வேதாந்தவாசிரியர் குருபரம்பராஸாரத்தில் எம்பெருமானார் இன்னாரிடம் இன்னது அதிகரித்தாரென்பதைச் சொல்லுமிடத்து திருக்கோட்டியூர் நம்பி பக்கலிலே ரஹஸ்யார்த்தங்களை அதிகரித்தாரென்னாமல் சிக்ஷித்தார் என்றார். அதிகரித்தாரென்கிற சொல்லுக்கும் சிக்ஷித்தாரென்கிற சொல்லுக்கும் நெடுவாசியுண்டு. குளத்து நீரை அப்படியே யெடுத்துப்பருகுவதற்கும் வடிக்கட்டிப்பருகுவதற்கும் வாசியில்லையா? அங்ஙனம் வடிக்கட்டின அர்த்தங்களை எம்பெருமானாருடைய பரம்பரையிலே படிந்தவர்கள் ரஸிக்கத்தக்கவர்களேயொழிய இடையிலே வந்துபுகுந்த மற்றையார்க்கு இவற்றின் சுவை தெரியவிரகில்லை. இவற்றை அவர்கள் தூஷிக்கிறார்களென்பதில் வியப்பில்லை. இதையிட்டும் இவர்களை நாம் நவீநர்களென்பது.

இராமபிரானை *சந்த்ரகாந்தாநநம்* என்றார் முனிவர். இங்கு உபமிதஸமாஸம் கொண்டு சந்திரனைப்போலே அழகிய முகமுடையவர் பெருமாள் என்று பொருள் கூறினாரொருவர். மற்றொருவர் அப்பொருளைக் கண்டித்து, "சந்திரன்போலழகிய முகமுடையவரென்று பொருளன்று; சந்திரனிற் காட்டிலும் அழகிய முகமுடையவரென்று பொருளப்பா!" என்றார். இவற்றில் முந்தினது சிறந்ததா? பிந்தினது சிறந்ததா? என்பதை ஆராயகில்லாமல் 'உபமித ஸமாஸந்தான் சாஸ்த்ரஸம்மதம்; பஞ்சமீதத் புருஷன் இங்குப் பொருந்தாது என்று சிலர் விவாதத்தை வளர்த்திக் கொண்டு கிடந்தால் 'இந்த அரஸிக சிகாமணிகளோடு நமக்கென்ன விவாதம்? * உங்களோடெங்களிடையில்லையே * என்று நாம் விலகவேண்டியதே' என்று நினைத்து விலகுவதே ரஸிகர்கள் பணியாம்.

இது போலவே ஸத்ஸம்ப்ரதாய வ்ருத்தர்கள் எம்பெருமானைப்பற்றிச் சொல்லுமவையெல்லாம் தாம் தாம் நேராக அநுபவித்துச் சொல்லுமவை. அப்படிப்பட்ட அநுபவரஸிகர்களில் வேதாந்தவாசிரியரும் அங்யதமரேயொழிய அன்னியரல்லர். அன்னார் உருகி யுள்கனிந்து வெளியிட்ட அர்த்தவிசேஷங்களில் நவீனர்களுக்கு அவகாஹனம் ஏற்படாதது ஆச்சரியமன்று. இடையறாததொடர்புவந்திருந்தாலன்றோ அவ்வர்த்தச் சுவைகளில் அபிநிவேச முண்டாகும். இதுதான் ஸாரமான பேச்சு.

## எட்டாவதுநாள் உபந்யாஸம்—பரகதஸ்வீகாரத்தின்சிறப்பு

சேதநன் தான் எம்பெருமானைப் பற்றுவது ஸ்வகத ஸ்வீகாரமென்றும், எம்பெருமான் தானே சேதநனை வரிப்பதானது பரகத ஸ்வீகாரமென்றும் வழங்கப் படுகின்றது. முறையே மர்க்கடகிசோர ந்யாயமென்றும் மார்ஜாரகிசோர ந்யாயமென்றும் வழங்குவர். நாம் அநுஸந்திக்கிற த்வய மந்த்ரத்தில் ப்ரபத்யே என்று நாம் அவனைப் பற்றுவதாகச் சொல்லப் படுகிறதேயொழிய அவன் நம்மைப் பற்றுவ

தாக ஒரு மந்த்ரமும் ஏற்பட்டிருக்கவில்லையே. ஆழ்வார்களும் * உன்னை நானடைந்தேன் * உன்னடிக் கீழமர்ந்து புகுந்தேன் * பற்றிலார் பற்ற நின்றானே * என்றிப்புடைகளிலே பணித்துள்ளார்களே யல்லது வேறு வகையாகப் பணித்திருக்கக் காண்கின்றிலோம். இப்படியிருக்க, பரகதஸ்வீகாரமென்று ஒன்றைப் பேசுவதும், "நாம் பற்றும் பற்று அவத்யகரம், அவன் பற்றும் பற்றே க்ஷேமங்கரம்" என்று கூறுவதும் அர்த்தமில்லாத வார்த்தைகள் என்று ஏசுவர் நவீநர். இவர்கள் ஏசுகிற ரஸ்யரஹஸ்யார்த்தத்தை ஸ்வாமி வேதாந்தகுரு நிலைநாட்டியிருக்கும் பரிசு காட்டப்படுகின்றதிங்கு. * அறிவினால் குறைவில்லா அகல்ஞாலத்தவரறிய நெறியெல்லாமெடுத்துரைத்த நிறைஞானத்தொரு மூர்த்தி * என்னப்பட்ட பரமபுருஷன் கீதா சாஸ்த்ரமருளிச் செய்தது மஹாபாக்யம். அதற்கு நம்மிராமானுசன் பாஷ்ய மருளிச் செய்ததும் அதற்கு ஸ்வாமி தாத்பர்ய சந்த்ரிகை பணித்ததும் பேரின்பமான பரம பாக்யம். கீதையில் எட்டாவது அத்யாயத்தில் பதினான்காவது ச்லோகம்—"அநந்ய சேதாஸ் ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யசஃ, தஸ்யாஹம் ஸுலபஃ பார்த்த! நித்ய யுக்தஸ்ய யோகிநஃ" என்பது.

"ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்" என்று பகவான் தான் தனக்கு உயிர்நிலையாகக் கொண்டாடும் ஞானியானவன் தன்னை உபாஸிக்க வேண்டியபடியையும் பேறுபெறும் பரிசையும் இனியருளிச் செய்கிறான் (கண்ணபிரான்)—என்று அவதாரிகையிட்டு சுலோகத்தை வியாக்கியானித் தருளியுள்ளார் பாஷ்யகாரர். இந்த சுலோகத்தின் கருத்து என்னவென்றால், அர்ஜுநா! எவன் இடைவிடாமல் எப்போதும் வேறொன்றிலும் நெஞ்சைச் செலுத்தாதவனாய் என்னையே ஸ்மரிக்கிறானோ, என்னோடு நித்ய ஸம்ச்லேஷத்தை விரும்பியிருக்கின்ற அந்த பக்தனுக்கு நான் ஸுலபன்—என்பதேயாம். இதில் (தஸ்யாஹம் ஸுலபஃ) 'அவனுக்கு நான் ஸுலபன்' என்கிற பகுதிக்கு பாஷ்யம் செய்தருளி யிருக்கின்ற வகையாவது, (அங்குள்ள ஸ்ரீஸூக்திகள்)

"தஸ்ய நித்ய யுக்தஸ்ய—நித்யயோகம் காங்க்ஷமாணஸ்ய, யோகிநஃ. அஹம் ஸுலப:- அஹமேவ ப்ராப்யஃ; ந மத்பாவ ஐச்வர்யாதிகஃ. ஸுப்ராபச் ச. தத்வியோகம் அஸஹமாநஃ அஹமேவ தம் வ்ருணே. மத்ப்ராப்த்யநுகுண உபாஸநவிபாகம் தத்விரோதி நிரஸநம் அத்யர்த்த மத்ப்ரியத்வாதிகஞ்ச அஹமேவ ததாமி இத்யர்த்தஃ. * ய மேவைஷ வ்ருணுதே தேந லப்யஃ* இதிஹி ச்ரூயதே. வக்ஷ்யதி ச *தேஷாம் ஸததயுக்தாநாம்...... இதி." ஆக இவ்வளவும் கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்திகள். (இவற்றின் பொருளாவது—) என்னோடு எப்போதும் கூடியிருக்கவேணுமென்கிற விருப்ப முடையவனுக்கு அடையத் தகுந்தவன் நானேயாகிறேன். மிக எளிதாக அடையத் தகுந்தவனுமாகிறேன் நான். (அதாவது) அவனுடைய பிரிவைப் பொறுக்க மாட்டாதவனாய் (அவனைப் பிரிந்து தரித்திருக்க மாட்டாதவனாய்) நானே அவனை வரிக்கிறேன். என்னை யடைவதற்கான உபாஸனத்தின் பரிபக்குவ நிலைமையையும், அதற்குற்ற இடையூறுகள் நீங்குதலையும், என்னிடத்தில் அதிகமான ப்ரீதி முதலியவைகளையும் நானே கொடுக்கிறேன். * நாயமாத்மாச்ருதியில் இவ்வர்த்தம் ப்ரஸித்தமாயிருப்பதோடு இந்த கீதையிலே மேலே பத்தாவது அத்யாயத்தில் 10, 11 ச்லோகங்களாலும் சொல்லப் படுகின்றது—என்பதாம்.

கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்தியை ஒவ்வொன்றாக எடுத்து விளக்குகிறேன். [தத்வியோக மஸஹமாநஃ அஹமேவ தம் வ்ருணே*] ஞானியான சேதநனைப் பிரிந்திருப்பதை எம்பெருமான் தான் பொறுத்திருக்கமாட்டதவனாய் தானே அந்த சேதநனை வரிப்பதாகக் கூறுகின்றவிதுதான் பரகத ஸ்வீகார மென்பது.

[*மத்ப்ராப்த்யநுகுண-உபாஸநவிபாகம் அஹமேவ ததாமீதி அர்த்தஃ*] இந்த வாக்கியமானது ஸ்வகத ஸ்வீகாரப்பற்றாசை நன்றாகக் கழிக்கிறது. இத்தலையில்

விளைவதெல்லாம் எம்பெருமானுடைய க்ருஷிபலமாக விளைகின்றதேயன்றி இவன் தலையாலே விளைவித்துக் கொள்ளுமது ஒன்றுமில்லை என்கிற ஸத்ஸம்ப்ரதாய ஸாரார்த்தம் தெளிவிக்கப்பட்டது. இந்த இடத்தில் *நாயமாத்மா ச்ருதியையும் எடுத்துக்காட்டியருளின பாஷ்யகாரர், பரகத ஸ்வீகாரத்திற்கு அதுவே ப்ரமாண மென்று நிரூபிக்கிற முகத்தாலே பிறருடைய அசட்டு வாதங்களை அகற்றினராயிற்று. இவ்விடத்தில் தாத்பர்ய சந்த்ரிகையில் ஸ்வாமி அருளிச் செய்துள்ள திவ்ய ஸூக்தி கள் தேனே பாலே கன்னலே யமுதே யத்தனை; "உக்தஸ்ய அதிவாதமாத்ரத்வ சங்காவ்யுதாஸாய ச்ருதி மூலதாமாஹ—யமேவேதி ' என்றருளிச் செய்திருப்பது ஆழ்ந்துநோக்கத்தக்கது. பாஷ்யகாரர் அருளிச்செய்ததில் *நாயமாத்மாச்ருதியானது ஜீவநாடியாக எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. இந்த ச்ருதிக்குப் பிறர் எழுதியுள்ள அபார்த்தங்களுக்கு ஈஷத்தும் இடமில்லாதபடி செய்தருளியிருக்கிறார் ஸ்வாமி தாத்பர்ய சந்த்ரிகையில். சேதநன் தலையிலே ஒன்றையும் வைத்திடாமல் "அஹமேவ தம் வ்ருணே......அஹமேவ ததாமீத்யர்த்தः" என்று ஒவ்வொன்றையும் எம்பெருமான் தலையிலே யாக்கி பாஷ்யகாரர் அருளிசசெய்திருப்பதை அக்காலத்தில் சிலர் அதிவாத மென்று சொல்லிக் கொண்டிருந்தார்கள் போலும். அது ஸ்வாமி திருச்செவியில் விழுந்தபடியால் அதை ஸஹித்திருக்கமாட்டாமல் "உக்தஸ்ய அதிவாதமாத்ர த்வசங்காவ்யுதாஸாய ச்ருதிமூலதாம் ஆஹ—யமேவேதி" என்று ப்ராமாணிகமான அவதாரிகையை இட்டருளினர். பரகதஸ்வீகாரமென்பது உபநிஷத்ஸித்தமான அர்த்தமாகையாலே அதிவாதமென்று நெஞ்சாலும் நினைக்கத்தகாதது என்று வெட்டொன்று துண்டிரண்டாக அருளிச் செய்தாராயிற்று வேதாந்த மஹாகுரு.

எம்பெருமானுக்குப் பெருமையாகச் சொல்லப்படுகின்ற எதையும் அதிவாதம் அதிவாதமென்றே பிறர் ஒதுக்குகின்றவர்களாகையாலே அவர்கள் வாக்கை அவலீலையாகக் கண்டித்தொழித்தார் ஸ்வாமி. இங்கு முக்கியமாகத் தேறினது என்னவென்றால், * நாயமாத்மா ச்ருதியில் *யமேவைஷ வ்ருணுதே தேந லப்யः* என்றது பரகத ஸ்வீகாரந் தன்னையே யென்பதை பாஷ்யகாரரும் வேதாந்தகுருவும் ஸமகண்டமாக வெளியிட்டார்களென்பதேயாம்.

இங்கு ஸாரமாகத் தெரிவிக்கவேண்டியதிவ்வளவே; *த்வத்பாதமூலம் சரணம் ப்ரபத்யே* என்றும் *புகலொன்றில்லாவடியேன் உன்னடிக்கீழமர்ந்து புகுந் தேனே* என்றும் நாம்பற்றுகிறோமாகக் காட்டிக்கொண்டு திருவடிகளிலே விழுந்தா லும், 'இது நாம் பற்றின பற்றன்று; எம்பெருமான் தானே பற்றுவித்தானத்தனை; அவன் நெடுநாளாகப் பண்ணிப் போந்த க்ருஷி பலித்ததத்தனை' என்கிற அநுஸந் தானம் ஊடுருவச் செல்லவேணுமென்பதேயாம். இவ்வநுஸந்தானம் ஹார்த்த மாகவும் ஸத்யமாகவுமிருந்தால் பரகதஸ்வீகாரமென்பதைப் பழிககவும் ஸ்வகத ஸ்வீகாரமென்று வாய்திறக்கவும் அவகாசமேயிராது. ... .... *

## ஒன்பதாவது நாள் உபந்யாஸம்—
## ப்ரபத்தி உபாயமன்றென்பதுபற்றி.

எம்பெருமான் நிர்ஹேதுகமாக அருள்செய்கிறானென்பது கொண்டு நாம் வாளா இருக்ககில்லோம். "நிஜகர்மாதிபக்த்யந்தம் குர்யாத் ப்ரீத்யைவ காரிதः, உபாயதாம் பரித்யஜ்ய ந்யஸ்யேத் தேவே து தாம் அபீः." என்று கீதார்த்தஸங் க்ரஹத்திலே ஆளவந்தாரருளிச் செய்தபடியே முறைவழுவாது செய்யக்கடவோம். "ஸ்ரீபகவதாஜ்ஞயா பகவத் கைங்கர்ய ரூபம்" என்று ஸங்கல்பித்துக்கொண்டு சிலபல செய்யாநின்றோம். ஸதாசார்யனை ஆச்ரயித்து த்வயோச்சாரணாநுச்சாரணத்தாலே ப்ரபத்திஸித்தியும் பெறுகிறோம். அதுதனக்கு உபாயத்வமுண்டென்று சொல்லு

மவர்களை முக்கியமாகக் கண்டிப்பவர் ஸ்ரீமந்நிகமாந்த மஹா குருவேயாவர். மேலே உதாஹரித்த கீதார்த்தஸங்க்ரஹச்லோக வியாக்கியானத்தில் (ரக்ஷையில்) ஸ்வாமி யருளிச் செய்வது காணீர்;—

"ஸ்வயம் ஸ்வாதுத்வாத் க்ஷணிகஸ்ய காலாந்தரபாவி பலஸாதநத்வ அநுபபத்திதர்ச நாச்ச நாஸ்ய ஸ்வவ்யாபாரே மோக்ஷோபாயத்வ புத்திரபி ஸ்யாத் இதி பாவ:. அந்ததஸ் தைஸ் தைராராதிதோ பகவாநேவஹி ஸர்வத்ர உபாய:" என்றார்.

இந்த வொரு ஸ்ரீஸூக்திபோதும் இவ்விஷயத்தில் தெளிவுபெற. *உபபத்தேச்ச* (3-2-4) *பலமத உபபத்தே:* (3-2-37.) என்கிற ப்ரஹ்மஸூத்ரங்களின் ஸ்ரீபாஷ்யத்தில் ஸ்வாமி விபுலமாக அருளிச்செய்திருக்கும் ஸ்ரீஸூக்திகளின் ஸாரமாகவே மேலே உதாஹரித்த கீதார்த்த ஸங்க்ரஹரக்ஷாஸூக்தி அமைந்தது.

ந்யாஸதசகத்தில் "ஸ்வாமிந்! ஸ்வசேஷம் ஸ்வவசம் ஸ்வபரத்வேந நிர்ப்பரம், ஸ்வதத்த ஸ்வதியா ஸ்வார்த்தம் ஸ்வஸ்மிந் ந்யஸ்யஸி மாம் ஸ்வயம்." என்னும் ச்லோகத்தில் ஒன்பதின்கால் ஸ்வசப்தப்ரயோகம் செய்தருளியுள்ளார் ஸ்வாமி; இதனால் சேதனனுடையமுயற்சி நாற்றம் வேரற அறுக்கப்படுகின்றமையையறிந்தால் உபாயமென்றும் ஸாத்யோபாயமென்றும் வாய் திறக்க வழியில்லை. ஸாத்யோபாய மென்றால் யாரால் ஸாதிக்கப்படுமுபாயம்? என்று கேள்வி வரும்; சேதநனால் ஸாதிக்கப்படுவதாகச் சொல்லியாகவேணும். இச் சொல்லை ஒன்பது வாள்கள் கொண்டு கண்டிக்கின்றதன்றோ கீழே காட்டிய ஸ்வாமியின் சுலோகம்.

ப்ரபத்தியாவது என்ன? *த்வமேவோபாய பூதோ மே பவேதி ப்ரார்த்தநா மதி:, சரணாகதி:" என்று சாஸ்த்ரம் கூறுகின்றது. எம்பெருமானையே உபாயமாக அத்யவஸிக்குமதுவே ப்ரபத்தியென்பது. இத்தகையதான ப்ரபத்தியானது தன்னிடத்தில் உபாயத்வபுத்தியை எங்ஙனம் ஸஹிக்கும்? ப்ரபத்தி யென்கிற வஸ்து தேறும்போதே அதன் அநுபாயத்வமும் தேறியேதீரும் என்று நியாயஸித்தாஞ்ஜநத்தில் ஸ்பஷ்டமாகவருளிச் செய்கிறார். (அதில் ஜீவபரிச்சேதத்தில்) "இயம் கேவல லக்ஷ்மீசோபாயத்வ ப்ரத்யயாத்மிகா, ஸ்வ ஹேதுத்வதியம் ருந்தே கிம் புநஸ் ஸஹகாரிணம்." என்கிற சுலோகம் ஸித்தாஞ்ஜனமேயாகும். இந்த சுலோகத்தினால் ப்ரபத்தியின் அநுபாயத்வம் தர்மிக்ராஹக ப்ரமாணஸித்தம் என்று சிலாலிகிதமாக்கினபடி. *கேவல லக்ஷ்மீசோபாயத்வ ப்ரத்யயாத்மிகா என்கிற விசேஷணம் நிரர்த்தகமன்று. சாஸ்த்ரஜ்ஞர்களில் தலைவரான வேதாந்தகுரு சாஸ்த்ரகதிவிருத்தமாக ப்ரபத்தி உபாயமென்று நெஞ்சாலும் நினைக்கமாட்டாரன்றோ.

சாஸ்த்ரங்களில் ஒன்று விதிக்கப்படுமானால் அது உபாயமாக (ஸாதனமாக) இருந்து தீரும் என்பது பொதுவான வொரு கொள்கை. உபாயமாக மாட்டாததை சாஸ்த்ரம் எதற்காக விதிக்கும்? எப்போது விதி ஏற்படுகிறதோ அப்போது விதிக்கப்படுகின்றவதின் உபாயத்வமும் கூடவே ஸித்தமாகுமாதலால் சரம ச்லோகத்தில் *மாம் ஏகம் சரணம் வ்ரஜ* என்று விதிக்கப்படுகிற ப்ரபத்திக்கு உபாயத்வம் அநிவார்யம்—என்று பிறர் நினைக்கக்கூடியதுண்டு. இதனையும் ந்யாஸ திலகமென்கிற க்ரந்தத்தில் ஸ்வாமி தாமே எடுத்துக்காட்டி ஸமாதானமும் வகுத்துள்ளார். *ஹேதுர் வைதே விமர்சே* என்கிற சுலோகம் காண்க. இதன் கருத்தாவது—ப்ரபத்தியானது விதிக்கப்பட்டிருப்பதனால் உபாயமென்று சொல்லவேண்டியிருந்தாலும் இங்கு அப்படி கொள்ளவேண்டா; ஒவ்வொரு வித்யையிலும் எம்பெருமானுக்கு ஒவ்வொரு ரூபம் அறியக்கடவதா யிருக்கிற கணக்கிலே இந்த ப்ரபத்திவித்யையில் இதராநபேக்ஷ உபாயத்வம் (பிறிதொன்றை எதிர்பாராத உபாயத்வம்) அறியத்தக்க ரூபமாதலால்-என்று இந்த ச்லோகத்தில் நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. ரஹஸ்யார்த்தமிதுவே.

இங்கு மற்றொரு வாதம். ஸித்தோபாயமென்றும் ஸாத்யோபாயமென்றும் உபாயம் இருவகைப்படும். எம்பெருமான் ஸித்தோபாயமானாலும் ஸாத்யோபாயமாக ஒன்றை அங்கீகரித்தே யாகவேண்டுமென்பர் நவீனர்; இதற்கு மீண்டுமறிவிக்கும் ஸமாதானமாவது—ஸாத்யோபாயமென்றால் "சேதநனுடைய முயற்சியால் ஸாத்ய மான உபாயம்" என்று தானே பொருளாகும். உண்மையில் இது சேதநக்ருதியாலே ஸாத்யமானதா? என்று ஆராய்ந்தால் மேலெழுந்தரீதியில் அப்படிச் சொல்லலாமாயி னும் * இசைவித்தென்னை யுன்தாளிணைக் கீழிருத்துமம்மானே * என்பதுபோன்ற பல பாசுரங்களைக் கண்டால் இது நம்முடைய முயற்சியால் ஸாத்தியமன்றிக்கே ஸர்வேச்வரனுடைய க்ருஷிபலமாகவே விளையுமதாக உண்மைதெரிவதால் ஸாத்யோ பாயமென்கிற வ்யபதேசமும் இதற்கு ஏலாது. இவ்விஷயம் "ஸ்வீகாரந்தானும் அவனாலே வந்தது; ஸ்ருஷ்டி அவதாராதி முகத்தாலே பண்ணின க்ருஷிபலம்" என்ற பிள்ளை லோகாசார்யருடைய ஸ்ரீஸூக்திக்குச் சார்பாக வேதாந்தகுரு *நிதாநம் தத்ராபி ஸ்வயமகில நிர்மாண நிபுண:* என்று ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஒன்பதாவதான உபாய விபாகாதிகாரத்தின் முகப்பில் ஸாதித்துள்ள சுலோகம் வடிக்கட்டின சாஸ்த் ரார்த்தம். இதன்பொருளை விவரிக்கவேண்டுமோ? அக்ஷரலப்யமானபொருளை யாரும் மாறுபடுத்தமுடியாது. அவனைப் பெறுதற்கு அவனே உபாயமென்னுமிடம் உபநிஷத் ஸித்தம். பக்தி ப்ரபத்திகளானவை அவன் திருவுள்ளமுகக்கைக்காகவா மத்தனை. அந்த பக்தி ப்ரபத்திகள் அமைவது மஹத்தான ஸுக்ருதபரிபாகத்தினால் தான். அந்த ஸுக்ருதந்தானும் எலியெலும்பனான சேதநனடியாக விளைவதன்று; நிகில நிர்மாண நிபுணனான பரமபுருஷன்தானே அதற்கும் மூலகாரணமாவன்— என்பது இந்த ச்லோகத்தின் பொருள். இதில் * நிதாநம் தத்ராபி ஸ்வயமகில நிர்மாண நிபுண: * என்கிற நான்காம்பாதமானது நிகமாந்த மஹா குருவின் ஸித்தாந்த ஸர்வஸ்வமென்று கொள்ளக் கடவது. சேதனன் தலையிலே சிறு நாற்றத்தையும் ஸஹியாதே அறவே துடைத்தொழிக்கும் வார்த்தையன்றோவிது.

நிதாநமென்கிற சொல்லுக்கு என்ன பொருளென்பதை அமரகோசங்கொண்டு அறிவது. "நிதாநம் து ஆதிகாரணம்" என்றான் அமரஸிம்ஹன். சேதநன் தலையி லுள்ளதாக எந்த ஹேத்வாபாஸத்தைக் காட்டினாலும் அதுவும் பரமபுருஷனடியாக வந்ததேயொழிய இத்தலையாலேவந்தது லவலேசமுமில்லையென்று ஸ்வாமி கல்வெட் டாக்கி வைத்திருக்க, இதற்கு நேர்விருத்தமாகச் சொல்லிக்கொண்டு போராடுவது என்னோ? "ஸ்ருஷ்ட்யவதாராதி முகத்தாலே பண்ணின க்ருஷிபலம்" என்ற பிள்ளை லோகாசார்யருடைய ஸ்ரீஸூக்தியே * நிதாநம் தத்ராபீத்யாதி ஸ்ரீஸூக்தியாக மொழிபெயர்ந்தது என்பதில் ஸந்தேஹமுண்டோ?

இப்படி ஸாரமாக எடுத்துக்காட்டப்படுகிற விஷயங்களை விட்டுவிட்டு "ரக்ஷ்யா பேக்ஷாம் ப்ரதீக்ஷதே" என்றிருக்கிறது பாருங்கள்; இத்தலையில் அபேக்ஷையைப் பரமபுருஷன் எதிர்பார்த்திருப்பதாகச் சொல்லியிருப்பதைக் காண்மின்" என்று அபூர்வ விஷயம் போலச் சொல்லவருவர்கள் நவீநர்கள். * நிதாநம் தத்ராபி * என்கிற ஸ்ரீஸூக்தியின்கீழ் எந்த எந்த வசனமும் தலைகாட்டாதே புக்கொளிக்கு மென்பதை குருகுலவாஸம்பண்ணியே யறியவேணும்.

வேதாந்தகுரு திவ்யஸூக்திகளில் "குணக்ஷதலிபிக்ரமாத் உபநிபாதிந: பாதி ந:" என்பது ஆச்சரியமானவொரு ஸூக்தி. இது எங்குள்ளதென்பதையுமறியார்கள் நவீனர்கள். ரஹஸ்யமாகத்தானுள்ளது. இதன் பொருளென்னவென்றால்; நாம் எம்பெருமானிடத்திலே சென்று சேருவதானது நம் இச்சையினாலேயன்று; குணா க்ஷரநியாயத்தாலே யாமத்தனை. அந்த நியாயமாவதென்னென்னில்; புழுவானது நேராகச் செல்லமாட்டாது; சுருங்கியும் மடங்கியும் குடிலமாகச் செல்லுவதே அதன் இயல்வு. அங்ஙனம் செல்லுவதை நாம் உற்றுநோக்கினால் ஏதேனுமொரு பானை

யிலே சில எழுத்துக்கள் எழுதினாற்போல் தேறும். எழுத்து எழுதவேணுமென்கிற நினைவு அதற்கு இருக்க ப்ரஸக்தியில்லை. ஆயினும் யாத்ருச்சிகமாக எழுத்துத் தேறுகின்றதென்பதைக் காணா நின்றோம். இதுதான் குணாக்ஷரந்யாயமென்பது. குணாக்ஷதலிபிக்ரமாத் என்று ஸ்வாமி ஸாதித்ததும் இதுவேயாம். நம்பிள்ளை பெரிய வாச்சான்பிள்ளைகள் "புழுகுறித்தது எழுத்தாமாப்போலே" என்றருளிச் செய்திருப்பதையே ஸ்வாமி இங்ஙனம் மொழிபெயர்த்தாரென்னத் தட்டில்லை. இந்த நியாயத்தைக்கொண்டு ஸ்வாமி என்ன ஸாதிக்கிறாரென்னில் "லிபிக்ரமாத் உபநிபாதுகः நः பாதி" என்கிறார். புழு குறித்தது எழுத்தாகிற க்ரமத்திலே, உபநிபாதிநः— தன்னிடம் வந்து சேருமவர்களான, நः—நம்மை, பாதி—எம்பெருமான் காப்பாற்றியருள்கிறான் என்று ஸாதித்துள்ளார். புத்திபூர்வகமாக வன்றிக்கே கடலலைவழியாகக் கரையிலே தள்ளுண்டு வந்து சேரும் துரும்புபோலே யாத்ருச்சிகமாகத் தன் பக்கலிலே வந்து சேருமவர்களை எம்பெருமான் தன்னுடைய இயற்கையின்னருளாலே குளிரக்கடாக்ஷித்தருளுகிறானென்கிற பரமார்த்தம் இதனால் தெளிவிக்கப்பட்டது.

நன்று, ப்ரபத்தி அநுபாயமென்கிற வாதத்தை யெடுத்து ஸ்வாமி கண்டித்துமிருக்கவில்லையா? என்று கேட்க வருவர்கள் நவீனர்கள். இதைப்பற்றி அடியேனுடைய நூல்களிலே மிக விரிவாக வரைந்திருக்கிறேன். சுருக்கமாகவிங்குணர்த்துகிறேன். அங்ஙனம் கண்டித்திருப்பதற்கு அநுதபித்து அவரே ஸமர்த்தனம் செய்தருளியிருக்குமிடங்களை எடுத்துக் காட்டுகிறேன். ஸ்வாமியின் ரஹஸ்யங்களில் ஸாரஸாரமென்பது ரஹஸ்யத்ரயஸாரத்திற்கு அநந்தரமான பத்தொன்பதாவது ரஹஸ்யம். ரஹஸ்யத்ரயஸாரத்தில் விபுலமாக ஸாதித்தவற்றை ஸாரமாக வெடுத்துரைப்பதனால் ஸாரஸாரமென்றே திருநாமமிட்டனர். அதில் சரமச்லோகாதிகாரத்தில்—

"இப்படி விதேயமான ப்ரபதநத்தைச் சிலர் அதிகாரி விசேஷணம் ஸம்பந்தஜ்ஞாநமாத்ரம் ஸித்தோபாய ப்ரதிபத்திமாத்ரம் அநிவாரணமாத்ரம் அநுமதிமாத்ரம் அசித்வ்யாவ்ருத்திமாத்ரம் சைதந்யக்ருத்யம் சித்தஸமாதாநம் என்றாற்போலே சொல்லுமதுவும் இவ்விதிக்கும் இத்தை விஸ்தரிக்கிற சாஸ்த்ரங்களுக்கும் இவற்றுக்குச் சேர்ந்த உபபத்திகளுக்கும் பாஷ்யகத்யாதிகளுக்கும் நிபுணஸம்ப்ரதாயங்களுக்கும் அநுகுணமாக வேண்டுகையாலே *நானே நானாவித நரகம்புகும் பாவம் செய்தேனென்று நிற்கிற நம்மை ஈச்வரன் ரக்ஷிக்கிற விடத்தில் * வந்தடைந்தேனென்று நாம் பண்ணுகிற அல்பமான வசீகரண யத்நம் * அதுவுமவனதின்னருளே * இசைவித்தென்னை இத்யாதிகளிற்படியே அவன்தானே காட்டி ப்ரவர்த்திப்பித்ததொரு வ்யாஜமாத்ரமன்றோவென்று ஸித்தோபாய ப்ராதாந்யாநுஸந்தானத்தில் அவர்களுக்கு தாத்பர்யம்"

என்றருளிச்செய்திருப்பது காணீர். உண்மையான சாஸ்த்ரார்த்தம் எதுவோ அதைத்தான் இங்கு வெளியிட்டருளினார். "அவர்களுக்கு தாத்பர்யம்" என்ற விதனையே பல விடங்களில் தம்முடைய தாத்பர்யமாக வெளியிட்டுள்ளார்.

"உபநிஷத்துக்களிலே நிர்குணமாக வோதப்பட்ட பரப்ரஹ்மத்தை ஸகுணமென்பார்க்கு கல்யாண குணவத்தாநுஸந்தானத்திலே தாத்பர்யம்"

என்பதற்கும் இதற்கும் ஏதேனும் வாசியுண்டோவென்று பார்க்க. .... .... *

**ஸ்ரீ காஞ்சீ அண்ணங்கராசார்ய ஸ்வாமியின்**

**வைசாகோத்ஸவ-உபந்யாஸமாலை முற்றிற்று.**

# எழுபத்தைந்து வினவிடை - (முன்னிதழ்த்தொடர்ச்சி)

57. வினு:—"ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்" என்கிற கீதா சுலோகத்தை யெடுத்துக்கொண்டு ஏதோ ஸாதித்தது இடையில் விச்சின்னமாய் விட்டது; அதைப் பூர்த்திசெய்யும்படி ப்ரார்த்திக்கிறேன். (விடை.) ஸகல ஜகத்துக்களும் எம்பெருமானுக்கு சரீரமாய் அவன் உயிர்க்கு உயிராயிருக்க, ஞானிகளைத் தனக்கு உயிராகச் சொல்லுகிறுன். ...ன் நியாமகனுயும் ஸர்வசேஷியாயுமிருக்கிற இருப்பு தவிர்ந்து தன்னை நியாம்யனுகவும் ..சஷ பூதனுகவுமாக்கிப் பேசியுள்ளான். அன்றியும், கீதையில் தான் சொல்லுவ ..தல்லாம் தன்னுடைய மதமாயிருக்க, இவ்விஷயத்தை விசேஷித்து "மே மதம்" ..ன்கிறுன். இதைப்பற்றி தாத்பர்ய சந்திரிகையில் ஸ்வாமி யருளிச் செய்திருப்பது ..கவினிது; இவ்வர்த்தம் வேதாந்தங்களுக்கு இணங்கின ஸித்தாந்தமாக இருந்தாலிருக் ..ட்டும்; இல்லாமற்போனுல் போகட்டும்; தேர்த்தட்டிலே கண்ணபிரானுக வீற்றிருந்து ..சொல்லுகிற என்னுடைய ஸித்தாந்தம் இதுவே—என்பதாக ஸ்ரீ க்ருஷ்ண ஹ்ருதயத்தை ..விவரித்தருளினுர். இதனுல், ஸகல சாஸ்த்ரங்களும் ஒரு தட்டாய் "ஜ்ஞாநீது ஆத்மைவ" ..ன்கிற இவ்வசனம் ஒருதட்டாய் இதுவே மேன்மை பெற்றதென்று தேறிற்று. இளைய ..பெருமாளை நோக்கி "த்விதீயம் மேந்தராத்மாநம் த்வாம்" என்று பெருமாளருளிச் ..செய்ததைக் கொண்டும் ஆசார்யர்கள் ரஸமயமான அர்த்தத்தை வெளியிட்டுள்ளார்கள். ஸ்தோத்ர ரத்நத்தில் "மஹாத்மபிர் மாம் அவலோக்யதாம் நய க்ஷணேபி தே யத்விர ஹோதிதுஸ்ஸஹ:" என்ற திவ்ய ஸ்ரீ ஸூக்திரத்நத்தில் இவ்வர்த்தவிசேஷங்களெல்லாம் ஜ்வலிக்கும். பகவான் தன்னிடத்தில் ஸாக்ஷாத் பக்தி செய்யும் அன்பர்களிற் காட்டிலும் "அடியாரடியார் தம்மடியாரடியார் தமக்கடியாரடியார் தம் அடியாரடியோங்களே" என்றும் "த்வத் ப்ருத்ய ப்ருத்ய பரிசாரக ப்ருத்ய ப்ருத்ய ப்ருத்யஸ்ய ப்ருத்ய:" என்றும் இருப்பார் திறத்திலே அளவுகடந்த வாத்ஸல்ய முடையவன் என்ருல் இதில் யாருக்காவது விப்ரதிபத்தியுண்டோ? விவாதமுண்டோ? இதுபோலவே, பகவான் தன்னிடத்தில் தீமை செய்யுமவர்களிற் காட்டிலும் தன்னடியாரடியாரடியார் திறத்தில் தீமை செய்யுமவர் களிடத்தில் அதிகமான நிக்ரஹருசியை யுடையவன் என்ருல் இதில் பொருந்தாமை யொன்றுமில்லை.

58. வினு:—யதிராஜ ஸப்ததியில் "அநுகல்பபூத முரபித்பதம் ஸதாம்......சரணம் யதீந்த்ர சரணம் வ்ருணீமஹே" என்கிறுர். ஸத்துக்கள் வணங்குவதற்கு எம்பெருமானுடைய திருவடிகள் கௌண பக்ஷமேயல்லது முக்ய பக்ஷமல்ல வென்றும், ஸ்ரீ பாஷ்ய காரருடைய திருவடிகளே முக்ய பக்ஷமென்றும் இதனுல் நிஸ்ஸந்தேஹமாய் ஸுஸ்பஷ்டமாய்க் கிடைக்கிறது. இதைப்பற்றி தேவரீர் திருவுள்ளமென்ன? (விடை) இதெல்லாம் அதிவாதமென்றே யிகழ்வர் சிலர், அவர்களுக்கு இதுதவிர வேறு வழியில்லை. ஸகல சாஸ்த்ர ஸாரஜ்ஞர்களோ வென்னில், இதுதான் வடிக்கட்டின சாஸ்த்ரார்த்த மென்று புகழ்வர்களே யன்றி இகழார்கள். இதில் விஸ்தரித்துச் சொல்லவேண்டிய அவசிய மிருப்பதாக நான் நினைக்கவில்லை.

59. வினு:—வேதாந்த சாஸ்த்ரார்த்த விஷயமாக எம்பெருமானுர்க்கும் யாதவ ப்ரகாசர்க்கும் நடந்த பல சர்ச்சைகளில் *கப்யாஸ ச்ருதியின் பொருளைப்பற்றின

விவாதம் தலைமை பெற்றதல்லவா? இதைப்பற்றி அவரவர்கள் ஏதோ ஸ்தூலமாகச் சொல்லிப் போருகிறார்களே யொழிய மர்மஸ்பர்சியாகச் சொல்லுவார் ஆருமிலர் என்று நினைக்கிறேன். தேவரீர் இதைப்பற்றி நன்கு ஆராய்ந்திருக்கக் கூடுமாதலால் அடிபணிந்து கேட்கிறேன். அடியேனுடைய அற்பபுத்திக்கு நன்றாக எட்டும்படி ஸாதிக்கவேணும். பெரிய விஷயமாதலால் அடியேன் எளிதாகத் தெரிந்துகொள்ளும்படி ஸாதிக்கவேண்டுகிறேன். **(விடை)** உன்னுடைய வார்த்தையைப் பார்க்கும்போது இதைப்பற்றி நீ ஏதோ ஸ்தூலமாக அறிந்திருப்பது போல் தோன்றுகிறது. நீ அறிந்திருப்பதைத் தெரிவித்தால், அது யுக்தமாயிருந்தால் அதையேஆமோதிக்கிறேன்; இல்லையேல் எனக்குத் தெரிந்ததைச் சொல்லுகிறேன். இவ்விஷயம் அவச்யம் ஸமர்மகமாகத் தெரிந்து கொள்ள வேண்டியதுதான். சிலர் இதில் க்ஷோபம் விளைத்திருக்கிறார்களென்பதையும் நானறிவேன். அது கிடக்கட்டும். நீ அறிந்ததைச் சொல்லு, கேட்போம்.

60. **வினா;**—அடியேன் ஒரு பத்ரிகையில் ஒரு வித்வான் எழுதியிருந்ததைக் கண்டேன்; என்ன எழுதியிருக்கிறாரென்றால்; "அத்வைதமதத்தை ஸ்தாபித்த சங்கராசாரியர் உபப்ரும்ஹணங்களின் உதவியின்றி ***கப்யாஸம்*** என்பதற்கு ஒருவிதமாய்ப் பொருள் கூறினார். ஸ்வாமிராமாநுஜர் உபப்ரும்ஹணங்களை நன்கறிந்தவராகையாலே ஸரியான பொருளைக் கூறினார். ***ராம: கமல பத்ராக்ஷ:*** என்பதே ராமாநுஜர் அறிந்த உபப்ரும்ஹணம். இதை சங்கராசார்யர் அறிந்திலர்" என்றெழுதியுள்ளார். இது யுக்தந்தானோவென்பதை தேவரீரிடமிருந்து தெரிந்துகொள்ள விரும்புகிறேன். **(விடை.)** 'சங்கராசாரியர்' என்றால் அவர் இன்னாரென்பதைத் தெரிந்துகொள்ளமாட்டாதவர் ஒருவருமில்லை. "அத்வைத மதத்தை ஸ்தாபித்த" என்கிற விசேஷணம் அவர்க்கு அவசியமேயில்லை. அவசியமற்ற அந்த விசேஷணத்தை இங்கு இட்டதற்குக் கருத்து என்னவென்றால், அத்வைத மதமென்பது பகவானிடத்தில் த்வேஷம் நிரம்பிய மதம்; அப்படி பகவத்த்வேஷம் நிரம்பிய மதத்தை சங்கராசார் ஸ்தாபித்தவராகையினாலேயே அவர் கப்யாஸ ச்ருதிக்கு பகவத் த்வேஷம் நன்கு விளங்கும்படியான மர்க்கடப்ருஷ்டப்பொருளை யெழுதிவைத்தார்—என்பதுதான் கருத்து என்னவேணும்.

61. **வினா:**—அவருடைய கருத்து எப்படியாவதிருக்கட்டும். இந்த விஷயம் ஸரிதானோ? **(விடை.)** எப்படி ஸரியாகும்? இது தவறாக எழுதப்பட்ட வாக்யம்; கப்யாஸ ச்ருதியின் அர்த்தமாக எதிரிகளின் கோஷ்டியில் வழங்கிவரும் மர்க்கடப்ருஷ்டார்த்தமானது சங்கராசாரியர்க்கு மிகவும் முற்பட்டவராயும் ஸ்ரீராமாநுஜர்க்கும் ஆதரணீயராயுமிருந்த த்ரமிடாசார் எழுதிவைத்த அர்த்தம்; அது ச்ருதப்ரகாசிகையில் ஸ்பஷ்டமாகத் தெரியவருகிறது. அதைத் தெரிந்துகொள்ளாமல் சங்கராசாரியர் எழுதிவைத்திருப்பதாக எழுதினது ஸரியன்று. உண்மை தெரிந்து எழுதினதாக இருந்தால், "த்ரமிடாசார் பூர்வபக்ஷார்த்தமாக எழுதிவைத்ததை சங்கராசாரியர் ஸித்தாந்தப் பொருளாக மயங்கி எழுதிவிட்டார்" என்று இவ்விதமாகப் பங்க்தி யெழுதியிருக்கவேண்டும். இப்படி யெழுதாமையினாலே அவர் உண்மையைத் தெரிந்து எழுதினாரல்லர்—என்றுதான் சொல்ல வேண்டும். அவர் என்றால் எவர்? என்கிறாயோ?......என்னமாட்டாய்.

62 விஞ:—சங்கராசாரியர் எழுதிவைத்த பொருள் உபப்ரும்மணங்களின் உதவியின்றி எழுதப்பட்டதாகச் சொல்லுவதனுல் என்ன ஏற்படுகிறதென்ருல், சங்கரா சாரியர் உபப்ரும்மணங்களின் உதவியைக் கொண்டிருந்தால் மர்க்கடப்ருஷ்டார்த்தம் கொண்டிருக்கவேமாட்டார், கம்பீராம்பஸ்ஸமுத்பூதேத்யாதியான ஸ்வாமிஸூக்தியால் ப்ரகாசிதமான மூன்று பொருள்களையே கொண்டிருப்பர் என்றதாகத் தேறுகிறது. இது ஊஹித்தறியவேண்டாதபடி ஸ்பஷ்டமாகவும் பிறரால் எழுதப்பட்டிருக்கிறது. அதாவது, ஸ்ரீராமாநுஜர் (ராம: கமலபத்ராக்ஷ:) என்கிற உபப்ரும்மணவசனத்தைத் துணைகொண்ட படியினுல்தான் (கம்பீராம்பஸ்ஸமுத்பூத) இத்யாதியர்த்தம் எழுதினுர் என்று அடியேன் கண்ட வியாஸத்தில் பல தடவை எழுதப்பட்டிருக்கிறது. இதைப்பற்றி ஸாதிக்கவேணும். (விடை.) கம்பீராம்பஸ்ஸமுத்பூதேத்யாதியான மூன்று அர்த்தங்களுக்கு ஸாதகமான உபப்ரும்ஹணம் ஸம்ஸ்க்ருத பாஷையில் ஏழேழ்பிறவி தேடினுலும் ஒரு துணுக்கைகூட கிடைக்காது; ஆழ்வார் ஸ்ரீ ஸூக்திகளில் கிடைக்குமேயொழிய ஸம்ஸ்க்ருத மயமான எந்த க்ரந்தத்திலும் ஸரி, அணுவளவும் கிடைக்காது; (ராம: கமலபத்ராக்ஷ:) என்கிற ஸ்ரீ ராமாயணவசனத்தை நம் ஆசாரியர்கள் எடுத்தாளுகிருர்களென்பது வாஸ்தவம்; ஆனுல் அதை எந்த விஷயத்திற்கு எடுத்தாளுகிருர்களென்பதை உள்ளபடி யுணர மாட்டாமல் அஸ்தாநே அகாண்டே உபயோகப்படுத்தியிருக்கிருரவர்—என்றுதான் திடமாகச் சொல்லவேண்டும்.

63. விஞ:—இதைத்தானே அடியேன் விரிவாகக் கேட்டுணர விரும்புகிறேன். (விடை) ஸ்ரீ ராமாநுஜர் அருளிச் செய்திருக்கிற கப்யாஸச்ருதி விவரணமான ஸூக்தியில் முதல், இடை, கடை ஆகிய மூன்றிடங்களிலும் விஷயமிருக்கிறது. (கம்பீராம்ப:) என்ருரம்பித்து (விகஸித) வரையில் முதல் விஷயம். (புண்டரீக) என்னுமல் (புண்டரீகதள) என்றது இடை விஷயம். அதற்கு மேலும் (அமல, ஆயத) என்றது கடையான விஷயம். இவற்றில் ஒன்றுகூட சங்கராதி க்ரந்தங்களில் ஒன்றிலும் கிடையாது. இவ்வளவையும் ஸ்ரீ ராமாநுஜர் திவ்ய ப்ரபந்தத்திலிருந்தே க்ரஹித்தாரென்றும், வேறு எந்த சாஸ்த்ரத்திலிருந்தும் க்ரஹிக்கவில்லை யென்றும் இதை க்ரஹிப்பிக்கவல்ல ஸம்ஸ்க்ருத ப்ரமாணம் லவலேசமும் கிடையாதென்றும், (ராம: கமலபத்ராக்ஷ:) என்பது தளாம்சமொன்றுக்கே உதவுமென்றும் தெரிந்துகொள். உண்மையில் கப்யாஸச்ருதி விசாரமெல்லாம் அந்த மூன்றெழுத்துக்களின் அர்த்தத்தில் விவாதத்தைப் பற்றினதே யொழிய வேறு எந்த விஷயத்தையும் பற்றினதன்று. இதை ஒவ்வொருவரும் நெஞ்சில் நன்ருகப் பதியவைத்துக் கொள்ளவேண்டும். விஷயத்தைப் பலாப்பிசினும் கூளமுமாக்கி மயக்கவொண்ணுது. (ராம: கமலபத்ராக்ஷ:) என்பது உபப்ரும்ஹணமன்று என்று யாரும் சொல்லமாட்டார்; சொல்லவுமில்லை. நீயே ஆலோசித்துப்பார் இந்த ராமாயண ச்லோகத்திற்கும் கம்பீராம்பஸ்ஸமுத்பூதேத்யாதிக்கும் என்னஸம்பந்தம்? கப்யாஸ ச்ருதிக்கும் (சுக்லாம்பரதரம்விஷ்ணும்) (யஸ்யஜ்ஞாநதயாஸிந்தோ:) என்கிற ச்லோகங் களுக்கும் எவ்வளவு உறவோ அவ்வளவு உறவுதான். (ராம: கமலபத்ராக்ஷ:) என்பதற்கும் "சங்கராசார் உபப்ரும்ஹணத்தை உதவிகொள்ளாமல் அர்த்தம் பண்ணினபடியாலே வேறுவிதமாக எழுதிவிட்டார்" என்று ஸாதிக்குமவர் (ராம: கமலபத்ராக்ஷ:) என்பதை அவர் உதவி கொண்டிருந்தால் எவ்விதமாக எழுதியிருக்க முடியும்? என்று விவரிக்க வேணும். (கம்பீராம்பஸ்ஸமுத்பூத) என்பதும் எழுதியிருக்க முடியாது; (ஸம்ம்ருஷ்டநாள)

என்பதும் எழுதியிருக்க முடியாது; (ரவிகரவிகஸித) என்பதும் எழுதியிருக்க முடியாது. காதம்பலவும் திரிந்துழன்றாலும் இதை மறுக்க முடியாது. (ராம: கமலபத்ராக்ஷ:) என்கிற உபப்ரும்ஹணவசனத்தை உதவி கொண்டிருந்தால் "புண்டரீகதள" என்று இவ்வளவே யெழுதியிருக்கலாம். வேறொன்றும் எழுதியிருக்க முடியாது.

புண்டரீக சப்தத்திற்கு புலி யென்கிற பொருளுமுண்டு; பாரத சம்புவில் "புண்டரீக நிவஹேஷு மீலநம்" என்றதை வாசித்தவர்களுக்கு அந்த அர்த்தம் ஸ்புரிக்கும். சங்கராசார் ஒருக்கால் அந்த அர்த்தத்தை எழுதியிருந்தால் அப்போது; அவர் (கமலபத்ராக்ஷ:) என்பதைத் துணைகொள்ளவில்லை யென்று சொல்லலாம். அவரோ புண்டரீக சப்தத்திற்கு அபார்த்தம் எழுதவில்லை. புண்டரீகதளம் என்னுமர்த்தத்தில் அவர்க்கு விஸம்வாதமும் கிடையாது. புண்டரீகாக்ஷ:, கமலநயந:, ஸரஸீருஹலோசந: என வருமிடங்களிலெல்லாம் தளம் என்று அர்த்தம் பண்ணியேயாகவேணுமென்று யாதொரு நிர்பந்தமுமில்லை. ஸஹஸ்ரநாமத்தில் புண்டரீகாக்ஷ நாமத்திற்கு பாஷ்யம் செய்தருளின பட்டர் தாமரைப் பொருளைக் காட்டவேயில்லை; அதனால் அவர்க்கு யாதொரு குறையும் கூறுவாரில்லையே. 'லோஹிதாக்ஷ:' முதலான வேறு திருநாமங்களிலே தாமரைக்கண்ணனென்னுமர்த்தம் கிடைத்துவிட்டபடியால் புண்டரீகாக்ஷ நாமத்திற்கு ஸம்பாவிதமான வேறொரு பொருள் பணிக்கலாமென்று திருவுள்ளம்பற்றி பட்டர் வேறு அர்த்தத்தைத் தமது பாஷ்யத்தில் எழுதிவைத்தார். அதைக்கொண்டு பட்டர் (ராம: கமலபத்ராக்ஷ:) என்கிற உபப்ரும்ஹண வசநத்தைத் துணைகொள்ளாமையாலே இப்படி வேறு பொருளுரைத்தார் என்று யாரேனும் தூஷணம் சொல்லுவாருண்டோ? "இதிஹாஸபுராணாப்யாம் வேதம் ஸமுபப்ரும்ஹயேத்" "வேதோபப்ரும்ஹணார்த்தாய தாவக்ராஹயத ப்ரபு:" என்கிற ப்ரமாணங்களில் யாருக்காவது விப்ரதிபத்தியுண்டோ? சங்கராசார்யரும் இதில் விப்ரதிபந்நரல்லரே. எந்த உபப்ரும்ஹண வசனம் எந்த வேதபாகத்திற்கு உபகாரகம் என்பதைப் பகுத்தறியகில்லாமல் ஜரத்கவவாக்யார்த்த ஸமசீலமாக எழுதியதனால் இவ்வளவு கிலேச மேற்படுகிறது.

64. **வின:**—எம்பெருமானார் கப்யாஸ ச்ருதிக்கு **கம்பீராம்பஸ்ஸமுத்பூதேத்யா**யான மூன்று பொருள்களை ஸித்தாந்தப் பொருளாகக் கொண்டது எதனாலே யென்பதை விவரித்தருளிச் செய்துவிட்டால் இதை விட்டு வேறு விஷய விஜ்ஞாபனத்தில் செல்லுகிறேன். **(விடை.)** இது அம்ருத லஹரீ பத்ரிகையிலும் ஸ்ரீ ராமாநுஜன் பத்ரிகையிலும் சிங்கப்பெருமாள் திருவாக்கு வெற்றியிலும் பெரிய பாரதமாக வெளிவந்த விஷயம்; அந்த வெளியீடுகளுக்குப் பஞ்சமில்லை. அவற்றின் ஸாரத்தை அதிஸம்க்ஷேபமாகச் சொல்லி நிற்கிறேன். *நீரார் கமலம்போல் செங்கண்மால்* என்று திருமடலில் திருமங்கையாழ்வாரருளிச் செயல். இதில் **நீரார்** என்ற கமல விசேஷணத்திற்குச் சேரவும், திருவிருத்தத்தில் "அழறலர்தாமரைக்கண்ணன்" என்ற சந்தைக்குச் சேரவும் **(கம்பீராம்பஸ்ஸமுத்பூத)** என்றது. திருவிருத்தத்தில் "எம்பிரான தடங்கண்கள்—மென்கால் கமலத்தடம்போல் பொலிந்தன" என்ற சந்தைக்குச் சேர **(ஸம்ம்ருஷ்டநாள)** என்றது. *செந்தண்கமலக்கண்—நாயிறு அந்தமில்லாக் கதிர்பரப்பி அலர்ந்த தொக்குமம்மானே* என்கிற திருவாய்மொழிச் சந்தைக்குச் சேர **(ரவிகரவிகஸித)** என்றது. இந்த சர்ச்சை போதும். இனி வேறு விஷயத்தில் செல்.

விவக்ஷயிருக்குமானால் (ந:) என்று இடையில் ப்ரயோகம் செய்திருக்கமாட்டார். இதை ஸ்தோத்ரபாஷ்யத்தில் ஸ்வாமி நன்கெடுத்துக் காட்டுகிறார். அங்குள்ள ஸ்ரீஸூக்தியைக் கேள்; "ஈச்வரஸ் து பரமாசார்யோபி ஸர்வேஷாம் ஸாதாரண:, அயம் து அஸ்மத ஸாதாரண இதி பாவ:" என்பது. இதற்கு முந்தின வாக்யமும் கேள்;—[ந:] நாதமுநி ஸம்ப்ரதாய பாஜாம் அஸ்மாகம். 'கோத்ரர்ஷிவத் அஸௌ' இத்யபிப்ராயேண குலபதித்வோக்தி:" என்று. விஷயம் இப்படியிருக்க, ஆத்யகுலபதித்வேந எம்பெருமானே விவக்ஷிதனாகலாமென்று சொல்லுவதற்கு ஔசித்யமில்லை.

68. **வினா:**—அடியேனுடைய சங்கையைச் சிறிது விவரித்து விண்ணப்பிக்கிறேன். நம்மாழ்வாரை வகுளாபரண: என்றும் வகுளபூஷண: என்றும் வகுளதர: என்றும் வழங்கிவருகிறோம். ஆழ்வார் தாமும் தமது திருவாக்காலே **மகிழ்மாலை மார்பினன்** என்றே யருளிச்செய்துவைத்தார். இதற்கெல்லாஞ்சேர ஆழ்வாரை வகுளாபிராமராகச் சொல்லவன்றோ அடுப்பது; "ஆத்யஸ்ய ந: குலபதேர் வகுளோஜ்ஜ்வலஸ்ய" என்றால் பொருத்தமாயிராதா? அங்ஙனம் சொல்லாமல் ஆழ்வாருடைய திருவடிகள் மகிழமலர்களால் அழகு பெற்றிருக்குமென்று சொல்லுவதில் என்ன விசேஷம்? **(விடை)** அலங்கார சாஸ்த்ரபத்ததியில் உனக்குப் பரிசயமில்லையென்று நினைக்கிறேன். **ஸுதர்சந சதக**மென்கிற திவ்யக்ரந்தம் ஸேவித்திருந்தாயாகில் இங்ஙனம் கேட்கமாட்டாய். அதில் ஸுதர்சந புருஷனுக்குச் சொல்லவேண்டிய பெருமைகளையெல்லாம் அவனுடைய ஏகதேசங்களான ஜ்வாலை, அரம், நாபி, அக்ஷம், நேமி என்கிற அவயவங்களிலே யேறிட்டு வருணித்திருக்குமழகு காணவேணும். எம்பெருமான் திருத்துழாயை யணிந்துகொள்வது ஒரு அவயவத்திலன்றே. *தோளிணைமேலும் நன்மார்பின்மேலும் சுடர்முடிமேலும், தாளிணைமேலும் புனைந்த தண்ணந்துழாயுடையம்மான்* என்று ஆழ்வார் அருளிச்செய்தபடியே திருத்தோளிலும் திருமார்பிலும் திருமுடியிலும் அணிந்துகொள்வதுபோலத் திருவடியிலும் அணிந்துகொள்ளுகிறான். அப்படியே ஆழ்வாரும், முக்கியமான வார்த்தை—*தன்மன்னு நீள்கழல் மேல்தண்டுழாய் நமக்குன்றி நல்கான்* என்றபடி அடியில் சாத்துமது தான் அடியார்களுக்கு உத்தேச்யம்.

69. **வினா:**—ஆளவந்தார் எம்பெருமானுடைய பரத்துவத்தைப்பற்றி யருளிச்செய்துவரும்போது *க: ஸ்ரீ: ச்ரிய:? பரமஸத்வ ஸமாச்ரய: க:? க: புண்டரீகநயந:? புருஷோத்தம: க:?* என்றிப்படி கேள்விகேட்டுவிட்டிருக்கிறாரே, இப்படி ஏதுக்குக் கேள்விகேட்கவேண்டும்? "ச்ரிய: ஸ்ரீ: ஸஏவ; பரமஸத்வ ஸமாச்ரய: ஸஏவ; புண்டரீகநயந: ஸ ஏவ; புருஷோத்தம: ஸ ஏவ" என்றிப்படி அறுதியிட்டுச் சொல்லிவைக்கலாகாதா? **(விடை.)** அப்படியும் அருளிச்செய்து வைத்தேயிருக்கிறார். வினாக்க விட்டுவைப்பதில் ஒரு சுவையுண்டு. இக்கேள்விகளைப் பெரிய பலகையில் பொறித்து நாற்சந்தியில் வைக்கவேணும்; பிறமதத்தவர்கள் பலரும் இக்கேள்விகளைக் காணவேணும்; துணிவுண்டானால் 'நாராயணனைத் தவிர்த்து வேறொரு தெய்வத்தை யெழுதிவைக்கட்டும், பார்ப்போம்—என்பது ஆளவந்தாருடைய திருவுள்ளம். நம்மாழ்வார் திருவாய்மொழியில் திருமால் பரத்துவத்தைப் பேசும்போது *திண்ணன் வீடு பதிகத்தில் *ஏழுலகும் சபாவஞ் செய்து அருளாலளிப்பாரார்? *ஆரே திருத்தித் திண்ணிலை மூவுலகும், தம்முள்ளிருத்திக் காக்குமியல்வினரே* என்று வினாவாகவருளிச் செய்தாரன்றோ; அந்த சாயை.

65. **வினா:—**ஆளவந்தார் தம்முடைய ஸ்தோத்ர ரத்னத்தில் முதலில் மூன்று சுலோகங்களினால் ஸ்ரீமந் நாதமுனிகளைத் துதித்தார். அடுத்தபடியாக நம்மாழ்வாரைத் துதிக்கவேண்டியிருக்க, பராசரமஹர்ஷியைத் துதித்துவிட்டுப் பிறகு நம்மாழ்வாரைத் துதித்திருக்கின்றார். நாதமுனிகளுக்கும் நம்மாழ்வார்க்குமிடையில் பராசர மஹர்ஷியைப் புகவிட்டது எதனாலே? உபக்ரமத்திலேயே நம்மாழ்வாரைத் துதித்து, பிறகு நாதமுனிகளைத் துதித்து, அதன் பிறகு பராசரரைத் துதித்திருக்கலாம். இந்த முறைகளை விட்டு வேறொரு முறையில் ஸ்துதியை அமைத்திருப்பது பற்றி த்ருப்திகரமான ஸமாதானம் ஸாதிக்கவேணும். **(விடை.)** ஆளவந்தார் திருவுள்ளத்தைச் செவ்வனே தெரிவிக்கிறேன் கேள். *மாதாபிதாயுவதைய:* என்கிற சுலோகம் அவதரித்திருக்கிறபடியை உற்று நோக்க வேணும். இதில் சடகோப:, சடரிபு:, சடாரி:, பராங்குச:, காரிஸூநு: இத்யாதி திருநாமங்களில் எதுவும் கிடையாது. “**ஆத்யஸய ந: குலபதே:**” என்றிருக்கிறது. எம்பெருமானையே ஆத்ய குலபதியாக விவக்ஷித்தருளினாரென்றும் சொல்லிவிடலாம். ஆனால் அங்ஙனம் சொல்லவொண்ணாதபடி “**வகுளாபிராமம்**” என்றொரு அத்புதமான ஸ்ரீ ஸூக்தியைப் புகுத்தியிருக்கிறார். திருத்துழாய் சாத்தின தெய்வமன்று, மகிழ்மாலை யணிந்த தெய்வமே எனக்கு உத்தேச்யமென்று காட்டினாராயிற்று. இந்த விசேஷணம் திருவடியிணைக்கு இட்டிருக்கிற படியாலே அந்தத் திருவடியை எம்பெருமானுடைய திருவடியாகவே திருவுள்ளம்பற்றி அப்பெருமான் வேறு, ஆழ்வார் வேறு என்று நினைக்க வொண்ணாபடி எம்பெருமானோடே ஏகீக்ருத்ய அருளிச் செய்தபடி. எம்பெருமான் திருவடி நிலைக்கு ஸ்ரீ சடகோபனென்றே அநாதிகாலம் தொடங்கி வ்யபதேசமாதலால் இந்த அவயவம் அவயவியோடே சேர்ந்திருக்க வேணுமென்று திருவுள்ளம் பற்றியே ஆழ்வார் துதியை எம்பெருமானுடைய துதியோடே அவ்யவஹிதமாக்கினபடி.

66. **வினா:—**இது மிகவும் த்ருப்திகரமான ஸமாதானம். ஆளவந்தார் திருவுள்ளத்திற்கு மிக விணங்கின ஸமாதானம். அடியேனுக்குத் தோன்றுவதொன்றையும் விஜ்ஞாபிக்கிறேன். தவறு இருந்தால் சிக்ஷிக்கவேணும். “**ஆத்யஸ்ய ந: குலபதே:**” என்பதனால் ப்ரபந்நஜந கூடஸ்தரான நம்மாழ்வாரை விவக்ஷிப்பதாக வன்றோ சொல்லப்படுகிறது. அப்படியல்லாமல், நம்முடைய குருபரம்பரைக்கு முதல்வன் எம்பெருமானே யாதலாலும் “லக்ஷ்மீநாதஸமாரம்பாம்.........வந்தே குருபரம்பராம்” என்று அநுஸந்தித்து வருதலாலும், “ஆபகவத்த: ப்ரதிதாம் அநகாம் ஆசார்யஸந்ததிம் வந்தே” என்கிற ஸ்ரீ ஸூக்தியை யநுஸரித்தும் எம்பெருமானையே ஆத்ய குலபதியாகக் கொள்வதில் குறை யொன்றுமில்லை யன்றோ. ஏவஞ்ச, ‘ஆத்யஸ்ய ந: குலபதே:’ என்பதற்கு ‘ஸர்வேச்வரனுடைய’ என்றே பொருள் கூறிவிட்டு, அந்த ஸர்வேச்வரனுடைய வகுளாபிராமமான திருவடியிணை—நம்மாழ்வார் என்று கொள்ளலாமன்றோ? இதில் ஏதேனும் அநுபபத்தி யுண்டோ? **(விடை.)** ஒரு அநுபபத்தியுமில்லை. தாராளமாகக் கொள்ளலாம். ஆனால் ஆளவந்தார், ஆத்ய குலபதியாக நம்மாழ்வாரைத் தவிர்த்து எம்பெருமானை விவக்ஷித்திருப்பரென்று தோன்றவில்லை.

67. **வினா:—**எனக்குத் தோன்றவில்லையென்பது ஒரு ஸமாதானமாகுமா? ஆத்ய குலபதி சப்தத்தாலே நம்மாழ்வாரைத்தான் கொள்ளவேணுமென்பதைத் திடமாக ஸாதிக்கவேணும். **(விடை.)** ஆளவந்தாருக்கு ஆத்யகுலபதித்வேந எம்பெருமானுடைய

கலக்கும்போது நம்மைப்பற்றின பேச்சு நிகழாதபடிக்கு (அதாவது) நாமிருப்பது தெரியாமல் அடங்கியொடுங்கி யிருக்கவேணுமென்பது விவக்ஷிதம்.

73. (வினு) திருவாய்மொழியில் ஒருபதிகத்திற்குப் பயனுரைக்கிற ஆழ்வார் "இவையுமொருபத்தும்வல்லார், ஊற்றின்கண் நுண்மணல்போல் உருகாநிற்பர்நீராயே" என்கிறுரே, நிகமனப் பாசுரந்தோறும் பலனுரைத்து வருகிற அடைவிலே இங்கும் ஒரு பலன் சொல்லவேண்டியிருக்க, ஒரு பலனும் சொல்லாமல் 'இப்பதிகம் வல்லவர்கள் நீராயுருகுவர்கள்' என்றால் இதுவொரு பலச்ருதியாகுமோ? (விடை) ஆழ்வார் ஸாதிக்கிற பலன்களுக்குள்ளே இதுதான் உயர்ந்தபலன் என்று கொள்ளாய். குயில் கூவினுலும் காக்கை கத்தினுலும் வாசியறியாதே நிற்கும் மஹிஷாதிகளைப்போலே உக்திகளிலும் ஸூக்திகளிலும் ஸ்ரீ ஸூக்திகளிலும் திவ்ய ஸ்ரீ ஸூக்திகளிலும் ஒரு வாசியுமறியாதே கல்நெஞ்சராயிருப்பார் பலரில்லையா? உருக்கமுண்டாவது ஸாமான்யமா? அருந்தவப் பயனல்லவா? வரப்ரஸாதங்கொண்டு பெறவேண்டிய பேறல்லவா இது. குணவித்தர்கள் என்னும்படியானவர்கள் "மநுஷ்யாணும் ஸஹஸ்ரேஷு கச்சித்" என்னும்படியாக வன்றோ தேறுவர்கள். "நீராயுருகாநிற்பர்" என்கையாலே இதுவும் ப்ராப்யபலன்களிலே ஒன்று (அல்லது) சிறந்தது என்று காட்டப்பட்டதாயிற்று. இக்காலத்தில் ஒருவரிருவர்.

74. **வினு:**—ஈகைக் **கண்டன**மென்று ஒரு கந்தை வந்திருக்கிறதே, அதைக் கண்டீரோ? (விடை) எந்த கண்டனமும் ஒரு நாளைக்குமேல் உயிருடன் இராதென்பது உனக்குத் தெரியாதா? ஒருநாள் எதற்கு? ஒரு நாழிகையில் தொலைந்ததென்று கொள்ளாய்.

75. (வினு) விவாஹங்களில் நடக்கும் சீர்பாடலில் "சீர்பாடீ களிமண்பாடப்போமே" என்று நீட்டுகிறுர்களே: இது இன்னதென்று புரியவில்லையே. கல்யாணத்தில் களிமண்ணுக்கு என்ன ப்ரஸக்தி? (விடை) களிமண்ணுமில்லை, களிமண்பாடுவதுமில்லை; "**சீர்பாடிக் களிமின் களிப்போமே**" என்பதுதான் உள்ளது. சீர்பாடல்பாடி நீங்கள் ஸந்தோஷியுங்கள், நாங்களும் ஸந்தோஷிக்கக்கடவோம் என்பது பொருள்.

களிமின் களிப்போமென்று இவ்வினுவிடையைத் தலைக்கட்டினேம்.

விசுவாவஸுஞு பங்குனி விசாகத்தன்று (8—4—66)
எழுபத்தைந்து பிராயப்பூர்த்திக்கான் நினைவுமலர்கள் நான்கில் மூன்ருவது நூலான

**எழுபத்தைந்து வினுவிடைகள் முற்றிற்று.**

**ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியருடைய**
பாஷாசதுஷ்டய நூல்களில்
அறுநூற்றுத் தொண்ணூற்றுமூன்ருவது நூல் முடிந்தது.

70. **(விஞ)** எவ்வுள் கிடந்தான் பதிகமான *காசையாடையில் ஏழாவது பாட்டில் *திசைமுகனுர் தங்களப்பன்* என்றதற்குப் பிறகு "**சாமியப்பன்**" என்றருளிச் செய்திருக்கிருரே திருமங்கையாழ்வார்; இதன் பொருளைக் கேட்கவிரும்புகிறேன். **(விடை)** ஸாமவேத ப்ரதிபாத்யனென்று பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம் செய்தருளியிருக்கிருரே; அதை ஸேவிக்கவில்லையா? வியாக்கியானங்களில் நிஸ்ஸந்தேஹமாக விளங்கும் விஷயங்களைப் பற்றி விசாரம் ஏதுக்கு?

71. **(விஞ)** ஸந்தேஹமுள்ள விடங்களிலும் சர்ச்சையுள்ள விடங்களிலுந்தான் அடியேன் கேட்பேன். ஒரு மஹான் இந்தப்பதிகத்தை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிட்டிருக்கிருர்; அதில் இப்பொருளை மதியாமல் fother of Sami' என்றெழுதுகிருர். குமரன் விஷய மென்கிருர்; அதனுல் கேட்டேன். **(விடை)** ***ஆடியாடி அகம் கரைந்து*** என்பதற்கு ஆடிமாதந்தோறும் மழை பெய்வதனுல் வீடு கரைந்துபோவதாக அர்த்தம் சொல்லுவாருமில்லையா? பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானங்களை வரியடைவே கற்றவர் நிகமாந்த வாசிரியர் என்பதை ஸத்ஸம்ப்ரதாய ஸாரார்த்த ரக்ஷையின் இரண்டாவது பரிச்சேதத்தில் கடைசி விஷயமாக "பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீ ஸூக்திகளில் நிகமாந்த குருவின் ப்ராவண்யம்" என்ற மகுடம் புனைந்த வியாஸம் விரிவாகவுள்ளது. அதைப் பூர்த்தியாக வாசிப்பது பிறவிப்பேறு. 164. என்று லக்கமிட்ட கடைசி விஷயமொன்றை மட்டும் வாசித்தாலும் போதும். வாசித்துவிடுவதில் பயனில்லை. அவ்விரண்டு விஷயங்களையும் நன்கு ஆராய்ச்சி செய்து உண்மையுணரவேணும். பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீ ஸூக்திக்கு மாருகச் சொல்லவேணுமென்கிற எண்ணமுடையவர்கள் தேசிக பக்தர்களாக இருக்க முடியுமா என்பதை விவேகிகள் விமர்சிப்பது. **சாமியப்பன்** என்பதன் பொருள் ஆசார்ய ஹ்ருதயத்திலும், விசதவாக்சிகாமணிகளிட்டருளின அதன் வியாக்கியானத்திலும் பரமபோக்யமாக ஸேவிக்கத்தக்கது. (சூ. 52.) "சந்தோகனென்று ஸாமாந்யமாகாமல்......வேதகீதச் சாமிநாளென்ற ஸாமம் தோன்ற" என்றவிடம் காண்.

72. **(விஞ)** ஒருவர் பட்டர் பக்கலிலே வந்து ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணம் கேட்க, அவர் அனந்தாழ்வான் பாடே போய்க் கேளுமென்ன, அப்படியே அவரிடம் சென்று கேட்க, "கொக்கைப் போலிருக்கும் கோழியைப் போலிருக்கும், உப்பைப் போலிருக்கும், உம்மைப் போலிருக்கும்" என்று அனந்தாழ்வான் அருளிச் செய்ததாகச் சொல்லுகிருர்களே; இதில் உப்பைப் போலிருக்கையாவது என்ன? பலரையும் கேட்டேன்; ஒருவரும் த்ருப்திகரமாகச் சொல்லவில்லை. தேவரீர் ஸாதிக்கவேணும். **(விடை)** பெரியோர்கள் ஸாதிக்கக் கேட்டதைச் சொல்லுகிறேன். தளிகை செய்யப்படுகிற பண்டங்களில் உப்பு சேர்க்கப் படும்போது சிலவற்றில் உப்பு அதிகமாக விழுவதுண்டு, சிலவற்றில் குறைவாக விழுவதுண்டு. சிலவற்றில் ஸமமாக [ஏறக்குறைவில்லாமல்] விழும். அதிகமாக விழுந்தால் 'உப்பு அதிகம்' என்று வருந்திச் சொல்லுவர்கள். குறைவாக விழுந்தாலும் 'உப்பேயில்லை' என்று வருந்திச் சொல்லுவர்கள். ஸமமாகச் சேர்த்திருந்தாலோ உப்பைப் பற்றின ப்ரஸ்தாவமே வருவது கிடையாது. பொதுவாகத் தளிகை நன்ருயிருக்கிறதென்று சொல்லவேணுமாஞல் 'உப்பு புளி காரங்கள் திட்டமாயிருக்கிறது' என்பதுண்டு; உப்பைப் பற்றி மட்டும் தனியான பேச்சுவாராது. அதுபோல, பெரியார்கள் குழாத்திலே நாம்

| | ரூ. | பை. |
|---|---|---|
| 75. திருப்பாவை ஜீயர் | 0 | 75 |
| 76. திருப்பாவை ஸ்வாபதேச உரை | 1 | 00 |
| 77. திருவாய்மொழியாயிரம் தீபிகை | 25 | 00 |
| 78. திருமந்த்ரார்த்த ஸாரம் | 2 | 00 |
| 79. திருவல்லிக்கேணி உபந்யாஸமாலை | 1 | 50 |
| 80. திவ்யப்ரபந்தக்கண்ணுடி | 1 | 00 |
| 81. திவ்யப்ரபந்த ஸாரத்திரட்டு | 0 | 75 |
| 82. திவ்யஸூரி சரிதகால நிர்ணயம் | 0 | 75 |
| 83. துவரைப்பிரான் திருவருள் | 0 | 75 |
| 84. தேசிக ஸஹஸ்ரநாம விமர்சனம் | 1 | 25 |
| 85. தொழுகையும் தொழச்செய்கையும் | 0 | 75 |
| 86. த்ரமிடோபநிஷத்ப்ரபாவஸர்வஸ்வம் | 2 | 00 |
| 87. த்வயார்த்தஸாரம் | 1 | 00 |
| 88. நப்பின்னையவதார ரஹஸ்யம் | 1 | 00 |
| 89. நரஸிம்ஹாவதாரஹேது நிர்ணயம் | 0 | 75 |
| 90. நல்வார்த்தை நானூறு | 2 | 00 |
| 91. நற்போது போக்கு | 0 | 75 |
| 92. நித்யாநுஷ்டான பத்ததி | 0 | 75 |
| 93. நித்யாநுஸந்தான உரை | 5 | 00 |
| 94. நூற்றெட்டுத்திருப்பதியந்தாதி உரை | 1 | 50 |
| 95. பகவத்கீதை யறுபத்திரண்டு | 1 | 00 |
| 96. பக்ஷீச சாகாநிலய: (உபந்யாஸம்) | 0 | 75 |
| 97. பன்னிருதிங்களனுபவம் | 2 | 00 |
| 98. பவித்ரயாத்ரா பரமானந்தம் | 1 | 00 |
| 99. பாதுகா ஸஹஸ்ராவதார விசாரம் | 1 | 00 |
| 100. பாதுகாஸஹஸ்ர வுரையாராய்ச்சி | 0 | 75 |
| 101. பார்த்தஸாரதியின் ப்ரபாவம் | 1 | 00 |
| 102. பூர்வாசார்ய வைபவம் | 1 | 50 |
| 103. பெரிய திருமொழி தீபிகை | 16 | 00 |
| 104. ப்ரமேயஸார உரை முதலியன | 1 | 50 |
| 105. மணவாளமாமுனிகள் கட்டியம் | 0 | 76 |
| 106. மணவாளமாமுனிவாத்ஸல்ய விவரணம் | 0 | 75 |
| 107. மணவாளமாமுனிகள் வைபவம் | 0 | 75 |
| 108. மதுரோபந்யாஸமாலை | 0 | 75 |
| 109. முமுக்ஷுப்படி ஸாரார்த்ததீபிகை | 2 | 00 |
| 110. முதலாயிரவுரை தீபிகை | 16 | 00 |
| 111. யாத்திரை விளக்கு | 1 | 00 |
| 112. யுஷ்மத்ஸூக்தி ஸௌரபம் | 0 | 75 |
| 113. ரத்னபரீக்ஷா (வடமொழி) | 0 | 75 |
| 114. ராமாநுஜ தயாபாத்ரதத்வம் | 1 | 00 |

| | ரூ. | பை. |
|---|---|---|
| 115. ராமாநுஜ தயாபாத்ர சரித்ரம் | 1 | 00 |
| 116. ஷேவ்ட்மொழியும் ஆங்கிலமும் | 1 | 50 |
| 117. ராமாநுஜ ஜயந்திமலர் | 1 | 00 |
| 118. வம்பவிழ்கோதை தத்துவம் | 1 | 00 |
| 119. வர்ணமாலை | 0 | 75 |
| 120. வரதன் ஸன்னிதி வரலாறு | 1 | 00 |
| 121. வாக்யஜ்ஞமலர் | 1 | 00 |
| 122. வாதிபீகர விஜயம் | 1 | 00 |
| 123. வால்மீகி ராமாயண வசனம் | 8 | 00 |
| 124. விசிஷ்டாத்வைத தர்சனம் | 1 | 00 |
| 125. விசிஷ்டாத்வைத ஸார்வஸ்வம் | 1 | 00 |
| 126. வித்வத்வைதிக பூஷணம் | 1 | 00 |
| 127. விதவாவபன விசாரம் | 0 | 75 |
| 128. வேதபாஷ்ய விமர்சம் | 0 | 75 |
| 129. வேதாந்த தேசிக சரித்ரம் | 1 | 00 |
| 130. வேதாந்தாசார்ய வைபவம் (ஸம்) | 1 | 25 |
| 131. வைசாகோத்ஸவ உபந்யாஸமாலை | 1 | 00 |
| 132. வைதிகலௌகிகமஹநீயமண்டலி | 2 | 00 |
| 133. வைதிக வித்வதாபரணம் | 1 | 00 |
| 134. வைஷ்ணவ மஹாநிதி | 1 | 00 |
| 135. ஸத்புருஷஸமாராதனம் | 1 | 00 |
| 136. ஸத்ஸம்ப்ரதாய பரித்ராணம் | 1 | 00 |
| 137. ஸத்ஸம்ப்ரதாய பாஸ்கரன் | 1 | 00 |
| 138. ஸத்ஸம்ப்ரதாயார்த்த ஸாரநிதி | 2 | 00 |
| 139. ஸதாசார்யஸூக்தி ரக்ஷா | 1 | 00 |
| 140. ஸதுபந்யாஸரத்ன மாலை | 1 | 00 |
| 141. ஸம்வாத ஸம்மார்ஜநீ | 0 | 75 |
| 142. ஸர்வஜ்ஞ ஸூக்தி ஸர்வஸ்வம் | 2 | 00 |
| 143. ஸாதுஸாத்விக ஸம்வாதம் | 1 | 00 |
| 144. ஸ்த்ஸம்ப்ரதாயார்த்த ரக்ஷா | 1 | 25 |
| 145. ஸ்ரீராமாநுஜன் மாதப் பத்திரிகை வருடச் சந்தா | 5 | 00 |
| 146. வைதிக மநோஹரா வடமொழி மீ பத்ரிகை சந்தா | 10 | 00 |
| 147. ஸ்ரீராமாநுஜ பத்ரிக (தெலுங்கு) | 10 | 00 |
| 148. ஸ்ரீராமாநுஜன் பழைய ஸஞ்சிகைகளின் வால்யம் (பயிண்டு) | | |
| 149. P. B. A. நூல் தொகுதிகள் 12 | 100 | [illegible] |
| 150. வைதிக லௌகிக மஹநீய மண்டலி | 2 | [illegible] |

மற்றுமுள்ள நூற்றுக்கணக்கான புத்தக[illegible] களுக்கு வேறு கியாடலாக் காண்க[illegible]